

தி. தி. தே. செயலாட்சித் தலைவரிடமிருந்து ஜனாதிபதி அவர்கள் கோயில் பிரஸாதம் பெறுகின்றார்.

**அண்மையில் இந்திய ஜனாதிபதி டாக்டர். நீலம் சஞ்சீவ ரெட்டி அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து, திருமலையில் பல்வேறு நிகழ்ச்சி களில் பங்கேற்றார்.** (புகைப் படங்கள் : 2, 3 உள் அட்டைப்படங்களில் காண்க.)



இதுபோது தி. தி. தே. பல்வேறு மொழிகளில் வெளியிட்ட 4 மலிவுப் பதிப்பு சமய நூல்களை ஜனாதிபதி அவர்கள் வெளியிட்டார்.



ஸோயம் ஸுந்தர லோக நாதம்
அமிர்தம் வேதாந்த ஸாரம
சிவம் ஞானம் பிரும்ஹ மயம்
ஸுரேச மமலம் லோகைக தீபாங்குரம் ।

இந்திராதித்ய நராதிபம் சுரகுரும்
த்ரைலோக்ய சூடாமணிம்
பிரும்மா விஷ்ணு சிவஸ்வரூப ஹ்ருதயம்
வந்தே ஸதா பாஸ்கரம் ।।

*[ஒளி பொருந்திய உடலை உடையவனுகவும், உலகிற்குத் தலைவனுகவும், அழிவில்லாதவனுகவும், வேத உபநிஷத்துக்களுக்கு சாரமானவனுகவும், புனிதத்தன்மை யுடையவனுயும், ஞான வடிவானவனுகவும், பிரமம் மயமான வனுகவும், கடவுளர்களுக்குக் கடவுளாக விளங்குபவனுகவும், குறைவில்லாதவனுகவும், எல்லா உலகங்களுக்கும் பேரொளியாக விளங்குபவனுகவும் இருப்பவனே!*

*இந்திரனையும், மற்றைய தேவர்களையும், மற்றும் மானிடரையும் காப்பவனுகவும், தேவர்களுக்கு குருவாகவும், மூன்று உலகங்களுக்கு ஞான ஒளியாகவும், பிரம்மா, விஷ்ணு சிவன் ஆகிய மும்மூர்த்திகளின் ஆத்ம சொரூபமாகவும் விளங்குபவனே! சூர்ய பகவானே!! உம்மை வணங்குகிறேன்!!!]*



# ஸப்தகிரி




பிப்ரவரி 1981

மலர் 11
இதழ் 9

தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர் :*

**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,**
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**முழு விவரங்களுக்கு:**

EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI-517501.


## உள்ளுறை



அட்டையில் : **ஞான ஸ்வரூபன் சூர்யபகவான்**



# செய்திச் சுருக்கம்



## ஆஸ்தான பண்டிதர்

இந்திய சுதந்திரப் போராட்டக் காலத்திலிருந்தே இந்து சமயத்திற்கென தம் வாழ்நாளையே அர்ப்பணித்து, நூற்றுக்கும் மேற்பட்ட சமயம் சம்பந்தப்பட்ட நூல்களை எழுதியவரும், ஆந்திர மாநிலம் பொன்னூரிலுள்ள ஸ்ரீ பிரபாகர உமா மகேஷ்வர பண்டிட் அறக்குழுவின் ஸ்தாபகருமான திரு. பிரபாகர உமா மகேஷ்வர பண்டிதர் அவர்களை தி. தி. தேவஸ்தானம் தன்னுடைய ஆஸ்தான பண்டிதராக நியமித்துள்ளது. அன்னாருக்கு வயது 94 ஆகும். இதனை ஒட்டி விழா ஒன்று 11-1-81 அன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் நடைபெற்றது.

விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் செயலர் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி அவர்கள் வரவேற்றதைத் தொடர்ந்து, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றுகையில் நூற்றுக்கும் மேம்பட்ட சமய நூல்களை எழுதிய திரு. உமா மகேஷ்வர பண்டிதர் அவர்கள் சிறு வயதில் விவேகானந்தரின் சமய உரைகளில் ஈடுபட்டு, சமயத் தொண்டு ஆற்ற தீராத ஆவல் கொண்டு, தன் இளமைப் பருவத்தினை சமயத்திற்கு அர்ப்பணித்து, தனி ஒரு மனிதனாகவே அந்நிய சமயங்களின் ஊடுறவல்களை எதிர்த்து, அன்றே ஆங்கிலேயர்களுக்கு சமயத் துறையில் ஓர் அச்சத்தை ஏற்படுத்தினார் என்று கூறி, அன்னாருடைய நூல்கள் பல தி. தி. தேவஸ்தானத்தாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, விரைவில் அவை மலிவுப் பதிப்பு முறையில் வெளிக் கொணரப்படும் என்றும் கூறினார். பின்னர் இவ்விழாவில் மேற்படி அறக்குழுவின் தலைவர் திரு. கே. பி. எஸ். கிருஷ்ண பகவான், பெஜாவர் மடத்தின் சுவாமிஜிகள், திருமலை சின்ன நாராயணஜீயர், பம்பாய் பிரம்மசாரி விஸ்வநாத்ஜி ஆகியோரும் உரையாற்றினர். பிறகு, ஆஸ்தான வித்வானாக நியமிக்கப்பட்டதை ஒட்டி, திரு. உமா மகேஷ்வர பண்டிதர் அவர்களுக்கு பொற்பதக்கம் ஒன்றும், பொன்னாடையும் அளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார். இறுதியில் தி. தி. தே. கலா பீடத்தின் சிறப்பு அலுவலர் திரு. பி. ரஜனிகாந்த ராவ் அவர்கள் நன்றி நவின்றார்.

## ஜெயதேவர் நினைவஞ்சலி

இந்திய பக்தி கவிஞர்களுக்கு ஒரு வழிகாட்டியாகஇருந்து,கண்ண பெருமானின் அருட்திறத்தை, அவனே பரம்பொருள் என்ற எண்ணத்தினை பக்தர்கள் யாவரும் அறிந்து கொண்டு வியக்கும் வகையில் எளிய வடமொழியில் கீத கோவிந்தத்தினை தந்தருளிய ஜெய தேவரின் நினைவு நாள் வெகு விமர்சையாகத் திருப்பதியில் 27-12-80 அன்று தி.தி.தே. கலா பீடத்தில் கொண்டாடப்பட்டது. இதனை ஒட்டி அன்று நடைபெற்ற விழாவிற்கு வருகை புரிந்தோரை தி.தி.தே. கலா பீடத்தின் சிறப்பு அலுவலர் திரு. பி. ரஜனிகாந்த ராவ் அவர்கள் வரவேற்றுப் பேசினார். இவ்விழாவில் பங்கேற்றுப் பேசிய ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தின் கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தின் உயர் விரிவுரையாளர் டாக்டர். டி. ஸ்ரீதரபாபு அவர்கள் ஜெயதேவரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும், அவர் அருளிய பாடல்களின் சிறப்பையும் பற்றி விளக்கினார். தொடர்ந்து பேசுகையில் 'கீத கோவிந்தத்தின்' இசைச் சிறப்பு, இலக்கியச் சுவை, பொருள் நயம் போன்றன பாரத நாட்டு பக்திக் கவிஞர்களை மட்டுமன்றி, மேலை நாட்டு கவிஞர்களான கோத்தே, ஜோன்ஸ், எட்வின் ஆர்னல்டு போன்றோரையும் வெகுவாகக் கவர்ந்தன என்று கூறினார். இவ்விழாவில் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற ஹைதராபாத் ஆல் இந்தியா ரேடியோ நிறுவனத்தில் கர்நாடக இசை தயாரிப்பாளரான திரு. மஞ்சாால ஜகன்னாத ராவ் அவர்கள் தம் உரையில் கி. பி. 15-ம் நூற்றாண்டில் வாழ்ந்த தெலுங்கு இசைக் கவிஞரான ஸ்ரீ அன்னமாச்சார்யா கவிதைகளுக்கும், ஜெயதேவரின் பாடல்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கிப் பேசினார். தொடர்ந்து பேசுகையில் மண வாழ்க்கை அன்பின் ஊடே பரம்பொருளை ஜெயதேவர் பாடிப் பரவியுள்ளார் என்பதை அன்னமாச்சார்யா அவர்கள் தன் வடமொழி பாடலில் குறிப்பிட்டுள்ளார் என்று கூறினார். இறுதியில் ஜெய தேவரின் அஷ்டபதிகள் பல கலா பீடத்தின் கலைஞர்களால் பாடப் பெற்ற நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது.

## ரூ. 10 இலட்சம்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஒவ்வொரு வருடத்தின் முதல் நாளன்று பக்தர்கள் திருமலைக்கு வருகை புரிந்து ஸ்ரீ வேங்கடேஸ்வரரைத் தரிசித்துச் செல்வது பல வருடங்களாக இருந்தும் வரும் நிகழ்ச்சியாகும். ஒவ்வொரு வருடமும் இது போல் வரும் பக்தர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே செல்வது பாரறிந்த செய்தியாகும். இவ்வகையில் 1-1-1981 அன்று திருமலைக்கு வருகைபுரிந்த பக்தர்களின் எண்ணிக்கை நாற்பதாயிரத்திற்கும் மேம்பட்டதாகும். அன்று கோயில் வருமானம் ரூ. 10.4 இலட்சமாகும். இதில் உண்டி மூலமாக ரூ. 4.85 இலட்சமும், பிரஸாதங்கள் விற்பனை மூலம் ரூ. 3.4 இலட்சமும், சிறப்பு நுழைவு தரிசன டிக்கட்டுகள் விற்பனை மூலம் ரூ. 2.15 இலட்சமும் அடங்கும். கடந்த ஆண்டு முதல் நாளன்று திருமலைக் கோயில் வருமானம் ரூ. 7.7 இலட்சமாகும். 9-1-81 அன்று தனிப்பட்ட ஒரு காணிக்கையின் மதிப்பு ரூ. 1 இலட்சமாகும் என்பது குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும். (ரூ. 100 நோட்டுக்கள் பல கொண்ட ஒரு கட்டாக இத்தொகை உண்டியில் இருந்தது.)

## இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா

இந்து சமயத்தின் மேம்பாட்டினை உணர்த்தவும், சமய உணர்வினை மக்களிடையே தீவிரப்படுத்தவும்

(38-ம் பக்கம் பார்க்க)

# ராசி பலன்

(1-2-81 முதல் 28-2-81 வரை)

டாக்டர். டி. அர்க்கசோமயாஜி, M.A., PhD.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

இவ்ராசியில் பிறந்தவர்கள், இம் மாதம் முழுவதும் மிகவும் மகிழ்ச்சியுடன் இருப்பர். பணவரவு மற்றும் முயற்சிகள் வெற்றியடைதல், உடல் நலமேன்மை. எனினும் தீய எண்ணங் கொண்டோரால் கருத்து வேறுபாடுகளுக்கு உள்ளாவதால் சிறிது மனக் கவலைகளுக்குள்ளாதல். நல்ல நண்பர்கள்.

## விருஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சிரிஷம் 2-ம் பாதம் முடிய)

பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், விருந்தினர்வருகை. எனினும் தன்னுடைய பிள்ளைகள், புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல், 13-ம் தேதிக்குப்பிறகு வரும் நாட்கள் நல்லன பயக்கும்; பணவரவு மற்றும் வெற்றி. எனினும் 13-ம் தேதிக்கு முன் சிறிது உடல் நலக்குறைவால் அவதியுறல்; 23-ம் தேதிவரை வீண் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். மொத்தத்தில் இம்மாதம் முழுவதும் மகிழ்ச்சியுடன் இவ்ராசிக்காரர்கள் விளங்குவர்.

## மிதுனம்

(மிருக சிரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

பண நஷ்டம் ஏற்படுவதால் அல்லது உறவினர்களால் ஏற்படும் துன்பத்தால் அல்லது உற்றார் உறவினருடன் ஏற்படும் பிரிவால் அல்லது உடல்நலம் கெடுவதால் அல்லது மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை காரணத்தால் அல்லது இகழ்ச்சிக்குள்ளாவதால், இவ்ராசிக்காரர்கள் சிறிது மனக்கவலைக்குள்ளாவார்கள். எனினும் பலவித துன்பங்களுக்கிடையே இவர்கள் மன ஒருமையுடன் இருந்து 21க்கு பிறகு மகிழ்ச்சியுடன் விளங்குவர்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

இவ்ராசியில் பிறந்தவர்கள் தூர பிரயாணமும் அதிக இடங்களுக்குச் செல்லும் பிரயாணமும் மேற்கொள்வர். வயிறு சம்பந்தப்பட்ட நோய்களுக்கு சிறிது உள்ளாவர். 21-ம் தேதிக்குப்பிறகு சிறிது கருத்து வேறுபாடுகள் ஏற்படல் அல்லது பெண்கள் காரணமாக அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மைகாரணமாகக்கவலைக் குள்ளாதல், எனினும், சத்காரியங்களில் ஈடுபடல். மேலும் தீய எண்ணங் கொண்டோரது பொறாமைக்கு உள்ளானும் இவ்ராசிக்காரர்கள் சுறுசுறுப்புடனும், வெற்றியுடனும் அலுவலகத்திலும் வெளி உலகிலும் நல்ல மதிப்புடனும் விளங்குவர்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

பணவரவாயினும் அதிக செலவினங்களுக்குள்ளாதல், மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது சிறிது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களுக்குள்ளாதல். 12-ம் தேதிக்குப்பிறகு பிரயாணம். 21-ம் தேதிக்கு முன் கருத்து வேறுபாடுகள் இருப்பினும் வெற்றி உறுதி. மொத்தத்தில் இவ் ராசிக்காரர்கள் மன நிம்மதியுடன் விளங்குவர்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

13-ம் தேதிவரை சிறிது உடல் நலக்குறைவால் அவதியுறல் பின்னர் உடல்நலம் மேன்மையடைதல், பணவரவு, வெற்றி, மதிப்புயர்தல், அவ்வப்போது பிரயாணம் மேற்கொளல். 21-ம் தேதிக்குப் பிறகு மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை, உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்.

## துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

கருத்து வேறுபாடுகள் அல்லது சிறிது உடல்நலக்குறைவு. பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல். எனினும்

(40-ம் பக்கம் பார்க்க)

## சந்தாதாரர்களுக்கு....

*31-3-81 ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. தொகை அனுப்ப வேண்டிய முகவரி:* The Welfare Officer, Publication Section T. T. D., TIRUPATI. T

*32, 53, 54, 62, 126, 132, 204, 228, 337, 375, 376, 378, 380, 381, 635, 646, 647, 648, 652, 654, 665, 667, 673, 674, 677, 1526, 1528, 1532, 1534, 1542, 1549, 1553, 1555, 1556, 1558, 1559, 1560, 1564, 2519, 2520, 2522 முதல் 2525 வரை, 2527 முதல் 2551 வரை, 2553 முதல் 2557A வரை, 2559 முதல் 2573 வரை, 2576 முதல் 2582 வரை, 2584 முதல் 2586 வரை, 2588, 2589, 2591, 2593, 2595, 2596, 2598 முதல் 2614 வரை, 2616 முதல் 2626 வரை, 2629 முதல் 2638 வரை, 2640 முதல் 2646 வரை, 2649 முதல் 2672 வரை, 2674 முதல் 2687 வரை, 2689 முதல் 2696 வரை, 2698 முதல் 2710 வரை, 2774.*

# குணக்குன்றேன் கும்பகருணன்



கம்பன் படைத்த கதாபாத்திரங்களிலேயே, எந்தவித குறையும் சொல்ல முடியாதவாறு, முழுவதும் நிறைவாகப் படைக்கப்பட்ட பாத்திரம் ஒன்று இருக்குமேயானால் அது இலங்கை வேந்தன் இராவணனின் தம்பி கும்பகருணன் என்பவனாவான்.

வால்மீகி தனது இராமாயணத்தில், கும்பகருணனை, ஒரு சாதாரண அரக்கர்களில் ஒருவனாகவே நமக்குக் காட்டுகின்றார். ஆனால் கம்பன் தனது காப்பியத்தில், இந்த பாத்திரத்தைப் பட்டைத் தீட்டி, மெருகூட்டி ஜொலிக்க வைக்கின்றான். இதனால்தான் கம்பன் படைத்தப் பாத்திரங்களில், கம்பனைப் படைத்த பாத்திரம் ஒன்று இருக்குமேயானால் அது கும்பகருணன்தான் என்று சொல்லுகின்ற அளவுக்கு சிறப்பு மிக்கவனாகத் திகழ்கின்றான்.

கம்பன் முதன் முதலாக, இராவணனின் மந்திர ஆலோசனை சபையிலே, கும்பகருணனை நமக்கு அறிமுகப் படுத்தி வைக்கின்றான். மற்றவர் பலரும் இராவணனின் கருத்துக்கும், செயலுக்கும் இயைபு படவே பேசுகின்ற பொழுது, அறத்தின் நாயகனாக கும்பகருணன் மட்டும்,

''இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பாரிலானுங் கெடும்''

என்ற வள்ளுவர் வாக்குக்கேற்ப, இராவணனின் தீயச்செயலைக் கண்டித்து நல்வழிப் படுத்திக் காக்க வேண்டும் என உணர்ந்து செயல் படுகின்றான்.

'பிரமதேவனை முதலாகக் கொண்ட குலத்தில் தலைமையாய் இருக்கின்ற நீ, ஆயிரம் வேதங்களையும் கற்று பொருள் உணர்ந்து சிறந்த அறிவுடையவனாகவும் இருக்கின்றாய், இப்படி இருகின்ற நீ,

.........வேறு ஒரு குலத்தோன்
தேவியை நயந்து, சிறைவைத்த செயல் நன்றோ?
பாவியர் உறும்பழி இதின்பழியும் உண்டோ?'

என்று தன் அண்ணன் இராவணனிடம் கேட்கின்றான்.

மேலும்,

'ஆசு இல்பரதாரம் அவை அம்சிறை அடைப்போம்;
மாசு இல் புகழ் காதலுறுவோர், வளமை கூரப்
பேசுவது மானம், இடைபேணுவது காமம்;
கூசுவது மானுடரை; நன்று நம கொற்றம்!

என்றும் இடித்துக் கூறுகின்றான்.

இந்த இடத்தில் கும்பகருணனிடம், தன் குலத்தின் பெருமை காக்கப்பட வேண்டும் என்ற உயர்ந்த நோக்கமும், பிறர் மனைவியை விரும்புவது குற்றம் என்று எடுத்துரைத்த சிறந்த பண்பாட்டையும் நாம் காண்கின்றோம்.

அடுத்து, முதல் நாள் போரில் தோல்வி அடைந்து கவலையோடு திரும்புகின்ற இராவணனிடம், மகோதரன், ஆற்றல் மிக்க தம்பி கும்பகருணன் இருக்கும்பொழுது நீ ஏன் கவலைப்படுகின்றாய், அவனைப் போருக்கு அனுப்பலாம் என்று எடுத்துக் கூறுகிறான். இதைக் கேட்ட இராவணன் புத்துயிர் பெற்று, உறங்குகின்ற கும்பகருணனை எழுப்ப ஏற்பாடு செய்கின்றான்.

எழுந்த தம்பியை தழுவிய இராவணன், தன் கையாலேயே உணவு ஊட்டிவிட்டு போர்க்கோலம் செய்து விடுகின்றான். அப்பொழுதுகூட கும்பகருணன் தன் அண்ணனைப் பார்த்து கேட்பான் கீழ்வருமாறு:

''ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனும் தவிர்ந்தது இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்
போனதோ? புகுந்ததோ, பொன்றும் காலமே?

எவ்வளவு எடுத்துச் சொல்லியும், இராவணனின் மனம் மாறுபடாததைக் கண்ட கும்பகருணன், விதியின் வன்மையை யாராலும் மாற்ற முடியாது என்று சொல்லி வருந்துகின்றான்.

..................
திட்டியின்விடம் அன்ன கற்பின் செல்வியை,
விட்டிலையோ? இது விதியின் வண்ணமே!

என்று, மற்ற எல்லா பாம்புகளும் கடித்தால்தான் விஷம் ஏறும், ஆனால் 'திட்டி' என்ற ஒரு வகைப்பாம்பு, பார்த்தாலே விஷம் பாயக்கூடிய சக்தியுடையது. இப்படிப்பட்ட கற்பின் கனலி சீதையின் துயர் இன்னும் தீரவில்லையா? இன்னும் நீ சீதையை விடவில்லையா? என்று கும்பகருணன் கேட்பதிலிருந்து, சீதையின் கற்பின் வலிமையையும், அதை கும்பகருணன் உணர்ந்து இருக்கின்ற சிறப்பையும், கம்பன் நமக்கு இப்பாடல் வாயிலாக எடுத்துக் காட்டுகின்றான்.

---

திரு. பி. கேசவராஜசேகரன்,
பெரம்பலூர்.

---

கடைசியாகப் போருக்கு புறப்படுகின்ற பொழுதுகூட, இராவணனின் மனம் மாறுபடதா? என்று ஏங்கி, பாசம் மிகுதியால் கண்ணீர் சொரிய சொல்லுவான், ''அண்ணா! நான் போருக்கு போகின்றேன். விதி என்னை பிடர் பிடித்து தள்ளுகின்றது. போரிலே நான் இறப்பது உறுதி. அப்படி நான் இறந்து விடுவேனேயானால், அதன் பிறகாவது சீதையை இராமபிரானிடம் சேர்த்துவிடு'' என்று கூறி மேலும் கும்பகருணன் பேசுவான் 'இலங்கை காவலா! என்னை வென்று விடுவார்களேயானால், நிச்சயம் உன்னையும் வென்று விடுவது உறுதி. ஆகவே என்னுடைய முடிவுக்குப் பிறகாவது உன்னுடைய முடிவை மாற்றிக் கொண்டு, சீதை பிராட்டியை விட்டுவிடு. நாள் இது

வரை உனக்கு நான் ஏதாவது குற்றம் செய்திருந்தால் அதைப் பொறுத்து, மன்னித்துவிடு' எனக்கூறி கண்ணீர் மல்க விடை பெற்றுச் செல்கின்றான்.

இதைக் கேட்ட இராவணனும் பாச மிகுதியால் தனது இருபது கண்களி லிருந்தும் கண்ணீர் சிந்துகின்றான். இந்த நிகழ்ச்சியை கம்பன்கீழ் கண்ட மூன்று பாடல்களில் படம் பிடித்துக் காட்டி, நமது கண்களிலிருந்தும் கண்ணீர் வடிய வைத்து விடுகின்றான்.

வென்று இவன் வருவென் என்று
உரைக்கிலேன்; விதி
நின்றது; பிடர் பிடித்து உந்த நின்றது;
பொன்றுவென்; பொன்றினால்,
பொலன் கொள்கோளியை,
'நன்று', என நாயக வுதி; நன்று
அரோ.

என்னை வென்றுளர்எனில், இலங்கை
காவல !
உன்னை வென்று உயருதல் உண்மை;
அதலால்,
பின்னை நின்று எண்ணுதல் பிழை;
அப்பெய்வனே
தன்னை நன்கு அளிப்பது தவத்தின்
பாலதே.

'இற்றை நாள் வரை, முதல், யான்
முன் செய்தன
குற்றமும் உளஎனின் பொறுத்தி
கொற்றவ !
அற்றதால் முகத்தினில் விழித்தல்;
ஆரிய !
பெற்றனென் விடைஎனப் பெயர்ந்து
போயினான்.

தன்னுடைய இறப்புக்குப் பிறகாவது, தன்னுடைய அண்ணனும் தன்னுடைய குலமும் தழைத் தோங்க வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக, எந்தவித தவறும் செய்யாத கும்பகருணன் தன்னையே அழித்துக் கொண்ட தியாகச் சுடராக விளங்குகின்றான்.

கும்பகருணனின் ஆற்றலையும், நல்ல அறிவையும், அறப்பண்புகளையும், உணர்ந்த இராமபிரான், அவனைத் தன் பக்கம் அழைத்து வந்து விடும்படி வீடணனை அனுப்புகின்றான். போர்க்களத்திலே கும்பகருணனை அடையும் வீடணன் 'அண்ணா! தீவினை ஒருவன் செய்ய, அவனோடு தீங்கு செய்யாத நீயும் சேர்ந்து தண்டனை ஏற்று அழிய வேண்டுமா? தருமம் தவறி நடப்பவர் யார் என்றாலும் அவரை விட்டு நீங்கி விடுதலே அறமாகும். வேத நாயகனான இராமபிரானே உன்னைக் கருணையால் வேண்டி அழைத்து வர என்னை அனுப்பி இருக்கின்றான். ஆகவே நீயும் இராமபிரானோடு வந்துசேர்ந்து விடு, அப்படி நீ வந்து விட்டால்,

எனக்கு அவன் தந்த செல்வத்து
இலங்கையும் அரசுஎல்லாம்

## அஷ்டமா சித்திகள் (8) அவைகளின் விபரம்

டாக்டர் K. ஸ்ரீனிவாசன், F.S.M.,
ஆரணி

1. **அணிமா :** தேகத்தை பரமானுவைப் போல் சூட்சுமமாக்குதல்.
2. **மகிமா :** தேகத்தில் தன் சுவாசத்தை மார்பும் குடலும் புடைக்கும்படி பூரிப்பதால் மகத்துவத்தை அடைதல்.
3. **லகுமா :** தன் தேகத்தை கனக்குறைவாக்கி ஜலத்தில் மிதக்கவும், அந்தரத்தில் நிற்கவும் சக்தி உடையவனாதல்.
4. **கரிமா :** தன் தேகத்தை மலைபோல் பெருகச்செய்தல். பெரிய பொருட்களையும் மலையையும் பெயர்த்து வேறிடத்தில் வைத்தல்.
5. **பிராத்தி :** தன் தேகத்தில் சுவாசபந்தனம் செய்து, தூர தேசத்தின் பொருளைப் பார்த்தல், மிருகம், பக்ஷி முதலியவற்றின் பாஷைகளைக் கேட்டல், மனிதர்களுக்கு உண்டாகும் பிணிகளை தரம்பிரித்து நிவர்த்தித்தல், அன்னியர் எண்ணங்களை தெரிந்து கொள்ளுதல், நெடுந்தூரத்தில் உண்டாகும் சப்தங்களைக் கேட்டறிதல்.
6. **பிராகாமியம் :** தன் தேகத்தைவிட்டு வேறொரு தேகத்தில் பிரவேசிக்கவும், திரும்பவும் சக்தியடைதல். இதையே கூடுவிட்டு கூடு பாய்தல் எனப்படுவது.
7. **ஈசத்துவம் :** தன் தேகத்தில் இந்திரியங்களை அடக்கி மனது சலனமற்று நிற்கவும், தானே பிரம்மசொரூபமாய், திரிகாலமும் தெரிந்த ஞானியாக ஆண்டவனால் செய்யப்பட்ட பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்யவும், மரணமடைந்தவரை உயிர்ப்பிக்கவும் செய்வான்.
8. **வசித்துவம் :** மிருகம், பக்ஷி முதலியவைகளைத் தன்வசப்படுத்தித் தான் கட்டளையிட்ட தொழிலை செய்யும் வகையில் பூத பௌதீகங்களையும் தன்வசப்படுத்துவது.

இவ்வித அஷ்டமாசித்தி பெற்ற சித்தர்களுக்கு பில்லி, பேய், பூதம், பைசாசம்முதலிய சேஷ்டைகளும். நவகிரகங்களால் விளையும் பீடைகளையும், சகல வியாதிகளையும் நிவர்த்திக்கும் சக்தியும் உண்டாவதுடன், திடகாத்திரமாகவும், நீடித்த ஆயுளுடனும் எல்லா உலகங்களிலும் சஞ்சரிக்கவும், அந்தந்த உலகங்களில் நடக்கும் செய்திகளை இருந்த இடத்தில் இருந்தே தெரிந்துகொள்ளும் வல்லமையும், ஆண்டவதரிசனமும் கைக்கூடும் என்பது திண்ணம்.

நினக்கு நான் தருவேன்; தந்து, உன்
ஏவலின் எளிதில் நிற்பென்;

எனக்கூறி அழைக்கின்றான்.

இதைக்கேட்ட கும்பகருணன் பாச மிகுதியால் தன் தம்பி வீடணனைத் தழுவி,

'நீர்க்கோல வாழ்வைநச்சி, நெடிது
நாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்கு
உயிர்கொடாது, அங்குப்போகேன்;
தார்க்கோல மேனிமைந்த! என்துயர்
தவிர்த்தி ஆயின்
கார்க்கோல மேனியானைக் கூடுதி
கடிதின்ஏகி.

'கருத்து இலா இறைவன் தீமை
கருதினால், அதனைக்காத்துத்
திருத்தலாம் ஆகின் அன்றோ திருத்
தலல்? தீராது? ஆயின்
பொருத்து உறுபொருள் உண்டாமோ?
பொருதொழிற்கு உரியதுஆகி,
ஒருத்தரின் முன்னம் சாதல் உண்
டவர்கு உரியது அம்மா.

என்று கண்ணீர் சொரிய கூறிஅனுப்பி விடுகின்றான்.

இலங்கைக்கு அரசனாக்குகிறேன், நீ வந்துவிடு என்று அழைத்தப் பொழுது கூட, செஞ்சோற்றுக் கடனுக்காக, தன் உயிரைக் கொடுப் பதே சிறப்பு எனக் கூறி, தன் குலம், அதன்பெருமை அழியாமல் காக்கப் படவேண்டும் என்பதற்காக தம்பி வீடணனை, இராமனிடத்திலே போய் சேர்ந்து விடும்படி கூறிய கும்பகரு ணனின் சிறப்பை யாராலும் அள விட்டுக் கூறக் முடியாது.

போர்க்களத்திலே இராமபிரானுக் கும் கும்பகருணனுக்கும் கடும்போர் நடக்கின்றது. இராமன் கும்பகருண னின் வலக்கையை வெட்டி வீழ்த்து கின்றான். வெட்டி வீழ்ந்த வலக்கை யை அறுத இடக் கையால் எடுத்து போர் புரிகின்றான். இடக்கையையும் இராமன் போக்க, வலது காலால் உதைத்துப்போர்புரிகின்றான். வலது காலையும் போக்க, ஒற்றைக் காலால் நொண்டியபடி போர் செய்கின்றான். அந்த ஒற்றைக் காலையும் இராமன் அழித்த பின்பும், கும்பகருணன் உருண்டு சென்று வாயினால் மலை களைக் கவ்வி, உமிழ்ந்து போர் புரிகின்றான்.

பாதம் கைகளோடு இழந்தனன்,
இருந்து. வான் பகுவாயால்[படியினட
காதம் நீளிய மலைகளைக்கடித்துஇறுத்து
எடுத்து வெங்கனல் பொங்கி
மீது மீது தன் அகத்து எழுகாற்றினால்
விசைகொடு திசைசெல்ல
ஊதஊதப்பட்டு, உலந்தன வானரம்.
உருமின் வீழ் உயிர்என்ன.

தன் உடம்பிலே கடைசிச்கொட்டு செய்நன்றிக்காகத் தன் உடலையும், அறத்திற்காகத் தன் உயிரையும் கொடுத்த உத்தமனாக கும்பகருணன் இறக்கின்றான்.

இவ்வாறு அன்பு, பாசம், ஒழுக்கம் அறிவு, அறம், செய்நன்றி எல்லாவற் றிலும் சிறந்து விளங்குகின்ற கும்ப கருணன் "மயிர் நீப்பின் உயிர்வாழாக் கவரிமான்" போன்று தன் மானத்தி லும் சிறந்தவனாகத் திகழ்கின்றான்.

போரின் போது தன் மூக்கை இழந்து விடுகின்ற கும்பகருணன் தான் இறந்த பிறகு கீழே விழுந்து கிடக்கின்ற,தன் மூக்கிலா முகத்தைக் கண்டு முனிவர்களும் தேவர்களும் நகைப்பார்களோ என நினைத்து, அஞ்சி, உயிர் போகின்ற நேரத்தில் கூட இராமபிரானிடம் வேண்டுவான்:

"மூக்கு இலாமுகம்" என்று முனிவர்
களும் அமரர்களும்
நோக்குவார் நோக்காமை நுன்
கணையால் என்கழுத்தை
நீக்குவாய், நீக்கிய பின், நெடுந்
தலையைக் கருங்கடலுள்
போக்குவாய் இதுநின்னை வேண்டு
கின்ற பொருள் என்றான்.

"மூக்கு இழந்த முகத்தை யாரும் பார்க்காதவாறு, உன்னுடைய அம் பினாலே எனது தலையைக் கொய்து கடலிலே கொண்டுபோய் போட்டு விடுவாய்" என்று, இராமபிரானிடம் வேண்டிக் கொள்வதிலிருந்து தன்மானம் மிக்க கும்பகருணனைநாம் பார்க்கின்றோம்.

கம்பராமாயணத்திலே வருகின்ற மற்ற பல முக்கியக் கதாபாத்திரங் களெல்லாம், சில இடங்களிலே, சிறு, சிறு குறைகள் சொல்லக் கூடிய அள வுக்குப் படைக்கப்பட்டிருந்தாலும், கும்பகருணன் மட்டும் எந்த இடத் திலும்எந்தச்சமயத்திலும் சிறிதுகூட குறை சொல்ல முடியாதவாறு சிறப்பு மிக்க கதாபாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கின்றான்.

கும்பகருணன் தூங்கு மூஞ்சியாக இருந்தானே, அது சிறுமைஇல்லையா? என்று நினைக்கத் தோன்றும். எந்த விதக் குறையும் சொல்ல முடியாமல் படைத்த கம்பன் இதை சிறுமையாக வாச்சொல்லுவான் என்பதையும் நினைத்துப் பார்க்கின்ற பொழுது ஒரு பெருமை வெளிப்படுகின்றது.

நாம் எவ்வாறு ஒரு பகல் விழித்து, இரவு தூங்கி எழுகின்றோமோ? அது போல கும்பகருணன் ஆறு மாதம் விழித்து, இருந்து, ஆறு மாதம் தூங்குகின்றான். தேவர்களும் ஆறு மாதம் விழித்து இருப்பார்கள் என் பது நமக்குத் தெரியும். இதை வைத்துப் பார்கின்ற பொழுது, தாழ்ந்த அரக்கர் குலத்திலே பிறந்து, அரக்க இயல்போடு வாழ்ந்த கும்ப கருணன், தன்னுடைய உயர்ந்த குணத்தினாலே, மனிதனிலும் உயர்ந்து, தேவர்களில் ஒருவனாகவே இருக்கின்றான் என்பதைக் காட்டு வதற்காகவே கம்பன், கும்பகருணனை யும் தேவர்களைப் போல் ஆறு மாதம் தூங்க வைத்து, ஆறுமாதம் விழிக்க வைத்தான்? என்று நினைப்பது மிகையாகாது.

தூங்கிக் கொண்டிருந்த கும்ப கருணனை, எழுப்புகின்ற பொழுது,

விண்ணினை இடறும்மேன்மை; விசும்
பினை நிறைக்குமேனி;
கண்ணெனும் அவையிரண்டும் கடல்
களின் பெரியவாகும்;
எண்ணினும் பெரியன் ஆன இலங்கை
யர் வேந்தன் பின்னோன்,
மண்ணினை அளந்து நின்ற மால் என
வளர்ந்து நின்றான்.

என்று கம்பன் கூறுகிறார்.

விண் உலகத்தையும், மண் உலகத் தையும், அளந்து நின்ற திருமாலா கவே காட்சி தருகின்றான் என்று திரு மாலுக்கு ஒப்பாக கும்பகருணனை சிறப்பித்துக் கூறுகின்றான் கம்பன்.

வெளித் தோற்றத்திற்கு கரடு முரடாக, முள் படர்ந்து தோன்று கின்ற பலா பழத்தின் உள்ளே இருக் கின்ற சுளை, இனிய சுவையாக இருப் பதுபோல, வெளித்தோற்றத்திற்கு அரக்கனாக, முரட்டுத்தனமானத் தோற்றத்தோடு இருந்தாலும் உள் ளத்திலே அன்பும், பாசமும் நிறைந்த தர்மத்தின் காவலனாகவே கும்ப கருணன் விளங்குகின்றான்.

இவ்வாறு தனக்கென வாழாது, அறத்திற்காகத் தன்னையே அழித்துக் கொண்ட தியாகத்தின் உருவமாகிய குணக்குன்றோன் கும்பகருணனின் சிறப்பியல்புகளை, நாமும் படித்து இன்புறுவோமாக! ✠

# திருமலை ஒழுகு

திருமலை திருப்பதியிலே திருவேங்கட முடையான் கோவிந்தராஜன் ஆகியவர்களுக்கு உசிதங்களான கைங்கர்யங்களை யுக்த காலத்தில் நடக்கும் படிக்குத் தம்முடைய பூர்வ வர்ணத்தவரான பரம பக்திமானும் பரம விரக்தரான ஒருவரை ஸ்தலத்திலே பிரதிஷ்டை பண்ணி அவருக்கு அயோத்யை இராமாநுஜ ஐயங்கார் என்று திருநாமம் சாத்தி, இரண்டு ஸ்தலத்திலும் ஸ்வதந்த்ர ஸ்வாம்யங்களும் (தலைமைத் தன்மையும்) நடக்கும்படியும் கட்டளைபண்ணினார். இவர் காலத்துக்கு முன்னால் துளுவ ஸாளுவராயன்காலத்திலே,கோவிந்த ராஜன் திருச்செல்வத்துக்கு ஒரு உபத்திரவம் வருகையாலே அப்போது ஸ்ரீ பண்டாரத்துக்குக் கர்த்தாவான ஆழ்வார் கோவிந்த ஜீயர் என்பார் ஒரு ஏகாங்கி, ஸ்ரீவைஷ்ணவர் எல்லோரும் அறியும்படி தமக் கஸாதாரணமாக ஒரு கண்டையை ஆக்கிக்கொண்டு ஸ்வாமி கைங்கர்ய நிமித்தமாக ப்ராணஹானி பண்ணிக் கொள்கிறேன் என்று திருக்கோபுரம் ஏறி விழுந்தார். அப்போது கோவிந்த ராஜன் கடாக்ஷத்தாலே ப்ராண ஹானி வராமல் திருக்கைகளிலே ஸ்வல்ப நோவுண்டாய்அந்த நோவும் சீக்ர காலத்திலே சமித்து, அந்த உபத்ரவமும் சமிதுப் போக அவர் பின்னையும் சிலகாலம் கண்டாநாத ஹநுமத்வஜ புரஸ்ஸரமாக ஸ்வாமி கைங்கர்யங்களைப் பண்ணிக் கொண்டிருந்தார்.

முன்னாளில், ஸ்ரீ ராமாநுஜ தரிசந ப்ரவர்த்தகரான மணவாள மாமுனியானவர், திருப்பதிக் கெழுந்தருளித் தேசாதிபதியை ஆசீர்வதித்து, ஸ்தலத்திலே மதாந்தரஸ்தராலே உபத்திரவம் வாராதபடிக்கு ஒரு உத்தமாச்ரமியை ஸ்தலாதிபதியாக்க வேணுமென்று சிந்தித்துத் தம் முடைய சிஷ்யராய், ராஜவல்லபராய், பகவத் கைங்கர்ய துரந்தரராய், கோயிலிலே ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்ரீ பண்டாரத்துக்கு நிர்வாஹகராய் இருக்கிறுப்போலே, திருமலைக்கும் உத்தாரகராய் நிக்ரஹாநுக்ரக ஸமர்த்தரானஒரு ஜீயரைக்கோயில் கேள்வித் திருவேங்கட ஜீயரென்று திருநாமம் சாத்தி, தேசாதிபதி அநுமதி கொண்டு, அர்ச்சகர் முதலான ஸமஸ்த பரிகரங்களையும், ஸ்தல நிர்வாஹகாரன ஆழ்வார் கோவிந்த ஜீயர் என்கிற ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவரையும், திருவேங்கடஜீயர் அதீனமாக்கி, இவர்களெல்லார்க்கும் இவர் சிக்ஷகராயும், ரக்ஷகராயும், திருவேங்கடச் செல்வத்துக்கு வர்த்தகராயும், தேசாதிபதிக்குப் பகவத் தர்மோபதேஷ்டாவாயும் கல்பித்து, எம்பெருமானார் திருமேனி முத்ரையாக ஒரு முத்ரை மோதிரத்தைப் பண்ணி ஜீயரைத் தரிக்கச் சொல்லிக் கொடுத்து, விஷ்வக்ஸேந முத்ராஸூசகமாக எம்பெருமானார் நியமன ஸித்தமாய், ஏகாங்கி பரம் பரா ப்ராப்தமான கண்டா, கடாரி, ஹநுமத் த்வஜங்களையும் அவர் வசம் பண்ணி, கைங்கர்ய யாத்ரா காலங்களிலே கண்டாநாத, ஹநுமத்த்வஜ புரஸ்ஸரமாக ஸஞ்சாரம் பண்ணுமென்று நியமித்து,

விஷ்ணோ: பூஜாதிகர்மாணி தர்மாம்ச்ச
புருஷாயுஷா |
நியமஸ்த: ஸதாபிக்ஷூ:
காரயேதோபதேசத: ||
யதிஸ்து வைஷ்ணவம் க்ஷேத்ரமதிஷ்டாய
சுசிஸ்ஸதா !
வ்யாகுர்வந் நிகமாந்தார்த்தாந்
ஆச்ரிதாநாம் ஹிதம் வதந் ||
காலம் க்ஷிபேத ப்ரயத்நேந கர்மணா
ப்ரஹ்மசிந்தநாத் ।

என்கிற ஸந்யாஸ தர்மங்கள் இருந்தபடியே திருவேங்கட ஜீயரும் ஸாங்கோபாங்கமாக வேதாந்த ப்ரவசனம் பண்ணிக்கொண்டு, அநேக சேதனரை ஸ்ரீராமாநுஜ தர்சநஸ்தராம்படி பண்ணிக்கொண்டு, திருவேங்கடச் செல்வத்தை அபிவ்ருத்தி பண்ணிக் கொண்டு, திருவேங்கடமுடையான், கோவிந்தராஜன் ஆகியவர்களின் திருமேனிக்கும், திருப்பவளத்துக்கும் உசிதமான ஔபசாரிக ஸாம்ஸ்பர்சிக ஆப்யவஹாரிக ரூபமான உபாசாரங்களையும் பண்ணுவித்துக் கொண்டு, பூர்வம் எம்பெருமானார் நியமனத்தினாலே யுண்டான திருவேங்கடஜீயருக்கு இநேக தர்மங்களையும் உத்தரிப்பித்து, நடப்பித்துக்கொண்டு,

யஸ்து ஜிர்ணநி தர்மாணி விஷ்ணோர்
நவ்யாநி வாஸதராத் !
உத்தரத்யக்ரபூஜாம் ஸம்ப்ராப்நுயாத்
தேவஸந்நிதௌ ||

என்கிற வைஷ்ணவ சாஸதிரத்தின் படியே எம்பெருமானார் நியமித்த ப்ரகாரமாக, ஸேனைதிபதி ஜீயர், திருமலைநம்பி, அரையர், அனந்தாழ்வான், திருப்பணிப்பிள்ளை வரிசையாக இவர்களுக்குத்தீர்த்தம் அருளப்பாடு நடந்தபடிக்கு, முன்னாக உத்தமாச்ரமியாய், விஷ்வக்ஸேன முத்ரராய் இருக்கிற திருவேங்கட ஜீயருக்குத் தீர்த்தம் அருளப்பாடும் கட்டளை பண்ணிப் பின்பு, ஸ்தலவாஸிகள், தேசாந்திரிகளான ஜீயர்கள், ஸ்ரீவைஷ்ணவர்கள், பின்பு, ஸகல ஸ்தலங்களிலும் அநேக கைங்கர்யம் பண்ணினவரான கந்தாடை ராமாநுஜ ஐயங்காருக்குத் தீர்த்த மருளப் பாடுங் கட்டளைப்பண்ணி, திருவேங்கடமுடையான், எம்பெருமானார் நியமான க்ரமத்திலே அத்யயனோத்ஸவம் கேட்டருளும் ப்ரகாரம், ஸ்தலாந்தர விலக்ஷணமாய் இருக்கையாலே, இந்த க்ரமத்துக்கு ஒரு பட்டோலையும் எழுதிக் கொடுத்து, ஸ்ரீ ராமாநுஜ புரத்திலே ஜீயருக்கு ஒரு மடமும் ஸங்கல்பித்துக் கொடுத்து திருவேங்கட ஜீயர் ஜ்ஞான ஸந்தான பரம்பராந்தர்ப் பூதரான ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களிலே தானே, திருமலை ஸ்தானத்துக்குத் தத்காலங்களிலே உத்தமாச்ரமியாய், மடாதிபதியாய்த் திருவேங்கடநாட்டுக்கும், திருவேங்கடச் செல்வத்துக்கும் கர்த்தாவாகவும் நியமித்துக் கோயிலுக் கெழுந்தருளினார்.

இந்த ஐதிஹ்யமாலா ப்ரபந்தம், மலைகுனிய நின்றாரரையர் திருமாளிகையில் (இருந்த) ஸ்ரீ கோசத்தைப் பார்த்து எழுதினது.

(தொடரும்)

# ஏத்துவார் மனத்துள்ளான்

பாரதப் பெரும் போர் நடந்தது. பஞ்ச பாண்டவர்கள் ஒருபுறமும் துரியோதனுதியர் ஒருபுறமும் நின்று போர் செய்தனர். அந்தப் போரில் கண்ணன் செய்த பல தந்திரங்கள் பாண்டவர்களுக்கு வெற்றி உண்டாகக் காரணம் ஆயின. அவன் படை எடுத்துத் துணை புரியா விட்டாலும் அருச்சுனனுக்குச் சாரதியாக இருந்தான். அவனுக்கு ஊறுபாடு·வராமல் பாதுகாத்தான். பஞ்சபாண்டவர்களைப்பற்றி அவன் கவலைப்படவில்லை. பார்த்தனுகிய அருச்சுனனுக்குத்துணை செய்தான். அவனுக்காகவே போரில் பல செயல்களைச் செய்தான். பார்த்த சகன் என்றும் பார்த்தசாரதி என்றும் திருநாமங்களை ஏற்ருன். அவனுக்கும் அருச்சுனனுக்கும் உள்ள பிணைப்பை அந்தத்திருநாமங்கள் காட்டுகின்றன. பாரதப் போரை நடத்தி அதை முடித்ததில் பெரும் பங்கை அப்பெருமான் ஏற்ருன். அவையாவுமே பார்த்தனுக்காகச் செய்தவை. பரஞ்சுடராகிய அவன் பக்த பராதீனனுகிப் பார்த்தனுக்கு உதவிபுரிந்தான்.

**பார்த்தற்காய் அன்று பாரதம்**
**கைசெய்திட்டு**
**வென்ற பரஞ்சுடர்.**

அவன் திருவிளையாடல்கள் பல. 'அவனுடையஇளமைப்பருவம் கோகுலத்தில் கழிந்தது. அப்போது அவன் கோபீசகனுக இருந்து கோபியர்களோடு கலசி ஆய்ப்பாடியில் விளையாடினன். கோபியரோடு கைகோத்துக் குரவைக் கூத்து ஆடினன். அவனே கோபாலனுக இருந்து அவர்களுடன் ஆடுவதில் இன்பம் கண்டான்.

**கோத்து அங்கு ஆயர்தம் பாடியில்**
**குரவை பிணைந்த எம் கோவலன்'.**

பக்தர்களிடம் என்றும் பிரியாது அவன் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு வாழ்பவன். அந்தக் காலத்தில் வெளிப்படையாகவே அருச்சுனனுக்குத் துணை நின்ருன் என்பது மட்டும் அன்று. எந்தக் காலத்திலும் தன்னை நினைந்து துதிபுரிபவர்களுடைய உள்ளத்தில் எழுந்தருளி அவர்களுக்கு அருள் பாலிப்பவன்.

**ஏத்துவார்தம் மனத்து உள்ளான்.**

அவன் அடியவர்கள் சேவித்து நலம் பெறும் பொருட்டு அர்ச்சா மூர்த்தியாகப் பல திருப்பதிகளில் எழுந்தருளியிருக்கிருன். திருவிடவெந்தை என்பது அந்தத் தலங்களில் ஒன்று.

**இடவெந்தை மேவிய எம்பிரான்.**

அவனே யாவரும் காண வளமுடைய திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கிருன். அந்தத்திருப்பதி தண்மை நிரம்பியது. வெப்பத்தால் வாடும் மக்களுக்குக் குளிர்ச்சியைத் தரும் நீரும் பொழிலும் அங்கே நிரம்ப உள்ளன. தடாகங்கள் புனிதமான நீர் நிரம்பியனவாக உள்ளன. சுற்றிச் சோலைகள் வளர்ந்து அழகு செய்கின்றன.

'அத்தகைய திருவேங்கடத்தை அடைந்து எம்பெருமானை வழிபட்டு நன்மையைப் பெறுவாயாக!' என்று உபதேசிக்கிருர் திருமங்கை ஆழ்வார்.

**தீர்த்தநீர்த்தடம், சோலை சூழ்**
**திருவேங்கடம் அடை நெஞ்சமே!**

'வலியவனுகிய அருச்சுனனுக்கு வலிமைதந்த வல்லாளன் அவன். மெல்லியலாராகிய ஆயர் மகளிரோடு அவர்மென்மையை உகந்து அவர்களுக்கு எளியனுக நின்று கைகோத்துக்குரவை ஆடினவன். ஆழ்ந்த பக்தி உடையவர்கள் தன்னை நாடித் தேடி வர வேண்டிய அவசியம் இன்றி அவர் உள்ளத்தையே நாடிச் சென்று அங்கே சிங்காதனமிட்டு உறைபவன். திருவிடவெந்தையிலும் திருவேங்கடத்திலும் நித்தியவாசம் செய்பவன்' என்று அவனுடைய இயல்புகளை விரித்துரைத்தார் ஆழ்வார்.

**பார்த்தற் காயன்று பாரதம்கைசெய்**
**திட்டு வென்ற பரஞ்சுடர்,**
**கோத்தங்கு ஆயர்தம் பாடி யில்குர**
**வைபி ணைந்தஎம் கோவலன்;**
**ஏத்து வார்தம் மனத்துள்ளான்; இட**
**வெந்தை மேவிய எம்பிரான்;**
**தீர்த்த நீர்த்தடஞ் சோலை சூழ்திரு**
**வேங்க டம்அடை நெஞ்சமே!**

என் நெஞ்சே அருச்சுனனுக்காகப் பழங்காலத்தில் பாரதத்தை நடத்தி வெற்றி கொண்ட மேலான சுடராக உள்ளவன், ஆயர்பாடியாகிய அவ்விடத்தில் ஆயர்மகளிரோடு கை கோத்துக்கொண்டு ஆடிய எம் கோபாலன், தன்னை வணங்கிப் பரவுவாருடைய தூய உள்ளத்திலே வாசம் செய்பவன், திருவிடவெந்தையில் விரும்பித் தங்கிய எம் உபகாரி ஆகிய எம்பெருமான் எழுந்தருளிய, புனிதமான நீரையுடைய தடாகங்களும் சோலைகளும் சூழ்ந்த திருவேங்கடத்தை அடைந்து வழிபட்டு நலம் பெறுவாயாக.

[பார்த்தன்-அருச்சுனன். அன்று: பண்டறி சுட்டு, கை செய்து - நடத்தி, வென்ற-வெற்றியை உண்டாக்கிய, கோத்து - கைகளைக் கோத்து, ஆயர் தம் பாடி—கோகுலம். குரவை-கை கோத்தும் ஆடும் கூத்து. மகளிர் பலருக்கும் ஆடவன் ஒருவன் தலைக்கை தந்து குரவை ஆடுவது இயல்பு. கண்ணன் அவ்வாறு நின்று ஆடினுன். ஏத்துவார் - புகழும் அடியார். தம்: சாரியை. இடவெந்தை-தொண்டை நாட்டிலுள்ள திருப்பதி. தீர்த்தம்-தூய்மை. தடமும் சோலையும் சூழ்ந்திடும்,

**திரு. கி. வா. ஜகந்நாதன்-சென்னை.**

திருவேங்கடமுடையானைச் சேவிப்பதற்கு முன்பே அந்தச் சூழ்நிலையில் புகுவாருக்கு உடம்பும் உள்ளமும் தண்மை பெறும். தீர்த்த நீரோடு கூடிய விசாலமான சோலை என்றும் பொருள் கொள்ளலாம். அடை-அடைந்து இறைஞ்சுவாயாக. நெஞ்சமே: ஏகாரம்; விளி.]

திருவேங்கடமுடையானை அடைந்து இறைஞ்சினுல் அவன் நம் அல்லல்களைப் போக்கி நம் உள்ளத்தையே தன் திருக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளுவான் என்பது குறிப்பு.

இது பெரிய திருமொழியில், முதல் பத்தில் எட்டாம் திருப்பதிகத்தில் உள்ள நான்காவது திருப்பாசுரம்.



தொடர் கட்டுரை

# திருமாலின் திரு அவதாரங்கள்




தூணிலிருந்து தோன்றிய நரசிங்கத்துடன் போர்புரிய இரணியன் ஆயத்தமானுன். தன் உடை வாளை உருவிக் கொண்டான். கேடயத்தை இடக்கையில் தாங்கிக் கொண்டான். கடல்களும் மலைகளும் அஞ்சுமாறு பெரிய ஆரவாரம் செய்தான். கோபத்தால் அவன் தன் வாயிதழ்களை மடித்துக் கொண்டான். கண்கள் கனலைச் சிந்தின. கொடிய நாகமெனச் சீறிச் சினந்தான்.

சீறிச் சினந்து நின்ற தந்தையை நோக்கிச் சிறுவன் பிரகலாதன் கூறலுற்றான்: "அரி எங்கே? அரி எங்கே? என்று கேட்டாயே! அந்த அரி நிற்கும் நிலையைப் பார்! இப்பொழுதாவது இறைவன் இருக்கிறுன் என்பதை நம்புகிறுயா! சங்கு சக்கரதாரியான திருமாலின் திருவடிகளை இப்பொழுதாவது வணங்கு! அவ்வாறு வணங்குவாயானுல், நீ செய்த குற்றங்கள் அனைத்தையும் அவர் பொறுத் தருளுவார்."

"அடே சிறுவனே! இந்த அரியை வணங்கும் படியா எனக்குக் கூறுகிறுய். நான் கூறுவதைக் கேள். பொங்கியெழுந்த இந்த நரசிங்கத்தின் ஒப்பற்ற தோள்களையும் தாள்களையும் என் வாளால் வெட்டி வீழ்த்துவேன். இந்த அரியை வெட்டி வீழ்த்திய பின் உன்னையும் இரண்டு துண்டாக வெட்டி வீழ்த்துவேன். அதன் பின்னர், உங்களைத் துண்டாடிய என் வாளினையே நான் தொழுவேன்! அதுவன்றிப் பிறரை வணங்குதல் என்பது எந்தக் காலத்திலும் என்னிடத்தில் இல்லாத ஒன்று! கொஞ்சிப் பேசும் மங்கையர் சிறு கோபமுற்ற காலத்திலும் கூட நான் அவர்களிடம் கெஞ்சிக் கும்பிட்டுக் கூத்தாடியது கிடையாது. மூடனே? இதை நன்ருகத் தெரிந்து கொள்," என்று கூறிய இரணியன் உலகங்கள் அனைத்தும் நடுங்குமாறு பெருஞ்சிரிப்புச் சிரித்தான்.

திரு. மா. சீதாராமன், M.A.B.Ed.,
பெருங்காட்டூர்.

இவ்வாறு ஆணவத்தோடு ஆர்ப்பரித்து நின்ற இரணியனை நரசிங்கப் பெருமான் தன் கைகளால் பற்றினுர். பற்றிய அளவிலேயே இரணியன் நடுநடுங்கிப் போனுன். மதயானை போன்றவனுன இரணியனை நரசிங்கப் பெருமான் அம்மாலைக் காலத்தில், அரண்மனையின் வாயிற்படியில், தன் தொடை மேல் கிடத்தி, தன் கூர்மையான நகங்களால் அவன் மார்பினைப் பிளந்து, குருதி பொங்கும் அவன் குடலினை மாலையாகத் தன் மார்பில் அணிந்து பெருமிதமுடன் நின்ருர்.

இரணியன் இறந்தது கண்டு இமையவர் ஆரவாரம் செய்தனர். நரசிங்கப் பெருமான்மீது மலர் மாரி சொரிந்தனர். குற்றமற்றவராகிய திருமாலின் திவ்விய வடிவத்தைத் தன் கண் குளிரக் கண்டு நின்ருன் பிரகலாதன். ஐந்து வயதே நிரம்பிய பிரகலாதன் அஞ்சாது நிற்க அமரரும் அயனும் உருத்திரனும் நரசிங்கப் பெருமானின் தோற்றத்தைக் கண்டு அஞ்சி நின்றனர். அரியின் அருகே செல்ல அஞ்சிய அமரர்களும் பிறரும் இலக்குமியின் திருவடிகளை வணங்கி நின்றனர். அரியின் சீற்றம் தணிய அருகில் செல்லுமாறு திருமகளை வேண்டிக் கொண்டனர். ஆனுல், திருமகளும் அரியின் அருகே செல்ல அஞ்சினுள்.

தேவர்கள் பலரும் வேண்டி நின்றும் அரியின் சீற்றம் தணியவில்லை. ஆனுல், பிரகலாதன் மட்டும் அரியின் திருவடிகளை வணங்கி ஆனந்தக் கடலுள் மூழ்கியிருந்தான். சிறுவனுகிய பிரகலாதனின் பக்தியைக் கண்டு நரசிங்கப் பெருமான் சீற்றந் தணிந்தார்; மனங்குழைந்தார்; பிரகலாதனை அன்புடன் தன் மலர்க் கரங்களால் தடவிக் கொடுத்தார்.

"அன்புக்குரிய மைந்தனே! பிரகலாதா! நீ விரும்பும் வரத்தைக் கேள்!" என்று நரசிங்கப் பெருமான் திருவாய் மலர்ந்தருளினுர்.

அமரர்கள் அனைவரும் வேண்டி நின்றும் அடங்காத சினம், ஐந்து வயதுப் பாலகனுக்குக் கட்டுப்பட்டு நிற்கும் அற்புதத்தை என்னென்றியம்புவது!

"பற்றற்றோர் நாடும் பரம் பொருளே! உம்மை எந்நாளும் அன்புடன் வழிபடும் வரம் ஒன்றே எனக்கு வேண்டும். இவ்வுலகில் நான் எந்தப் பொருளையும் விரும்பேன்! அழிவில்லாத பொருள் நீயேயல்லவா? முன்னுளில் மாயையாகி நின்றவனும் நீயே! மனத்தில் தோன்றும் அகங்காரமும் நீயே! ஐம்பூதங்களாக உள்ளவனும் நீயே! ஐம்பொறிகளாக உள்ளவனும் நீயே! அந்த ஐம்பொறிகளிடத்தே அமைந்த ஐம்புலன்களும் நீயே! ஈ, எறும்பு முதலான எண்பத்தாறு கோடி உயிரினங்களாக உள்ளவனும் நீயே. இவ்வுயிர்களை இயக்குபவனும் நீயே! உயிர்களின் அறிவாக ஒளிர்பவனும் நீயே! உன்னருளன்றி நான் வேண்டிக் கேட்கும் பொருளும் பிற உளவோ? மனைவி, மக்கள், வீடு, வாசல், பொன், பொருள், போகம் இவற்றால் உலகோர் துன்பத்தையன்றோ யடைகின்றனர்! அழியாத இன்பத்தை ஐம்புல நுகர்ச்சிகள் அளிக்கக்கூடுமோ?

பிறந்து பிறந்து வீணில் இறந்து போகும் மானிடரைப் போன்று நான் வாழ விரும்பவில்லை. "நானே தெய்வம்!" என்று இறுமாந்திருந்த என் தந்தையைக் கொன்று என் தந்தைக்கும் பெரும்பதம் அளித்த பெருமானே! தங்கள் சினம் தணிந்தது கண்டு விண்ணவரும் மண்ணவரும் வியப்பெய்தி நிற்கின்றனர். உலகமெலாம் வாழ அருள்புரிவீராக! இதுவே நான் தங்களிடம் வேண்டும் வரம்!"

பொருள் பொதிந்த பிரகலாதனின் பெருமொழிகளைக் கேட்டுத் திருமால் உள்ளங்குளிர்ந்தார். அவர் முகம் மலர்ந்தது. "பெறுதற்கரிய அன்பனே! உன் அன்பினைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தேன். உடலால் வரும்

# சமய எழுத்தாளர்கள் உதவித் திட்டம்

சமய ஆராய்ச்சி நூல்கள், சமய இலக்கியங்கள், அற இலக்கியங்கள் முதலியனவற்றின் முக்கியத்வத்தை மனதிற் கொண்டும், சமய எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் பொருட்டும், பல்வேறு மொழிகளில் பல சமய வெளியீடுகளை வெளிக்கொணரும் வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் "எழுத்தாளர்கள் உதவித்திட்டம்" எனும் அமைப்பினை ஏற்படுத்தியுள்ளது. இதற்காக 1980-81 நிதி ஆண்டுக்கென ரூ. 15 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. இதுவரை ரூ. 10 இலட்சம் செலவழிக்கப் பட்டுள்ளது. ஏராளமான இந்து சமயம் சம்பந்தப்பட்ட நூல்கள் ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, கன்னடம், இந்தி, வடமொழி முதலிய மொழிகளில் வெளிக் கொணரப்பட்டுள்ளன. இவ்வகையில் தமிழில் சிறந்த சமய எழுத்தாளர்களுக்கும், இளம் எழுத்தாளர்களுக்கும் நூல்களை வெளியிடுதற்காக, பண உதவி அளிக்கப்பட்டுள்ளது. இது வரை வெளி வந்துள்ள நூல்கள் கீழ்க்கண்டனவாகும். இந்து சமயத்தின் பெருமையைப் பரப்பிடும் வகையில் விளங்கிடும் இந்நூல்கள் யாவும் ஒவ்வொரு இந்து குடும்பத்திலும் இருக்க வேண்டிய ஒன்றாகும் என்பதை படிப்போர் உணர்வர்.

| | | | |
|---|---|---|---|
| 1. | கடவுள் வரலாறு விலை ரூ. 6/- | அரங்க. சீனிவாசன் | திருவள்ளுவர் பதிப்பகம், சின்ன செட்டித்தெரு, திருச்சி. |
| 2. | பரமன் அடியார் பத்துப்பேர் ரூ. 6-50/- | பண்ணை கோமகன் | வேங்கடவன் வெளியீட்டகம், கெங்குவார்பட்டி, மதுரை மாவட்டம். |
| 3. | வடநாட்டுத் திருப்பதிகள் ரூ. 9-00 | டாக்டர். ந. சுப்பு ரெட்டியார் | பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-1. |
| 4. | தெய்வீகச் சிந்தனைகள் ரூ. 5/- | வித்துவான். நாராயண வேலுப்பிள்ளை | எம். நாராயண வேலுப்பிள்ளை, 120, கிருஷ்ணராயர் தெரு, பிள்ளையார் பாளையம், காஞ்சிபுரம். |
| 5. | வேமன்னாவின் வேத வாக்கு ரூ. 6/- | தங்க வயல் லோகிதாசன் | ஓரி நிலையம் சென்னை-14. |
| 6. | அனுமன் கதை ரூ. 11/- | மா. சீதாராமன் | நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ் தெரு, தி. நகர், சென்னை-17. |
| 7. | ஸ்ரீ ஹரிதாஸ பஜனை மஞ்சரி ரூ. 8/- | தொகுப்பு | மத்வ சங்கம் 6, 10-வது தெரு, நங்கநல்லூர்- சென்னை. |



இன்பத்தை நீ விரும்பவில்லையென்று லும், சில காலம் இவ்வுலகத்தை யாளும் பேரரசனுக யாவரும் போற்ற ஆட்சி புரிந்து வருவாயாக! உலக இன்பத்தைத் துய்த்த பின்னர் என் பதம் வந்து சேர்வாயாக!''

திருமால் கூறியருளியதைக் கேட்ட பிரகலாதன், "எந்தையே! என் தந்தை என்றும் உம்மை நிந்தையே புரிந்துவந்தார். தெய்வநிந்தனை செய்த அவர் பாவத்தைப் போக்கி யருளல் வேண்டும்,'' என்று சிந்தை யுருகிக் கேட்டுக்கொண்டான். குடிக்கு நேர்ந்த குற்றத்தைத் துடைக்கப் பாடுபடும் பிரகலாதன் உள்ளத்தைப் புரிந்துகொண்ட திரு மால் திருவாய் மலர்ந்தார்:

''மாசகற்றப் பாடுபடும் மைந் தனே! உன் ஆசை நிறைவேறும். உன் குலத்தில் பிறக்கும் இருபத் தொரு தலைமுறையினர் என் அன்புக் குரியவராக விளங்குவர். அவர்கள் எப்பிழை செய்யினும் நான் தப்பித மாக எடுத்துக்கொள்ளமாட்டேன். உன் தந்தையையும் நான் புனிதனுக வே ஏற்றுக்கொண்டு விட்டேன். உன் தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களைச் சென்று செய்வா யாக!'' என்று உள்ளங் குளிர்ந்து உரைத்தார் திருமால்.

அரியின் திருநாமத்தை அன்புடன் சொல்லி வணங்கினுன் பிரகலாதன்! அனைவரும் அச்சம் நீங்கித் திருமா லின் திருவடிகளை வணங்கித் துதித் தனர். அன்னை இலக்குமியும் அச்சம் நீங்கி அரியின் அருகே சென்று நின்ருள். கூடிநின்ருர் அனைவர்க்கும் வரங்கள் தந்து மறைந்தார் வைகுந்த வாசன்! ''நாராயணு!'' எனும் நாமம் எங்கும் ஓங்கி ஒலித்தது.

பிரகலாதனின் அன்பின் பெருமை யை உலகுக்குணர்த்தவே திருமால் நரசிங்கப் பெருமானுக அவதாரம் செய்தார். தன்னை வைதுரைத்த இரணியனையும் நற்கதி சேருமாறு அருள் வழங்கினுர்.

நரசிம்மாவதாரத்தின் நயத்தினை இனிக் காண்போம்.

திருமாலின் திரு அவதாரங்களுள் நரசிம்மாவதாரம் புதுமையானது; புரட்சியானது. விலங்கு முகமும் மனித உடலும் கொண்டு விளங்கிய அற்புதம் புதுமையானதுதானே! முழுதும் மனித உடலாகவோ, முழு தும் விலங்கு உடலாகவோ எடுத் திருந்தால் அவ்வளவு கவர்ச்சியிருந் திருக்காது அல்லவா?

இறைவனே இல்லை என இறு மாந்து கூறிய இரணியனுக்குச் சவா லாக அமைந்தது இவ்வவதாரம். பிரமனிடம் இரணியன் பெற்ற வரங் களும் பொய்யாகாமல், இரணியன் இறப்புக்கு காரண காரியங்கள் பொருத்தமாக அமையுமாறு எழுந் ததும் இவ்வவதாரத்தின் சிறப்பே யாகும்.

"அரி இந்தத்தூணில் இருக்கிருனு? என்று தூணைப் புடைத்தான் இரணி யன். உடனே நரசிம்மம் வெளிப் பட்டது. அவன் எந்தத் தூணைத் தட்டினுனே, அந்தத் தூணிலிருந்தே புறப்பட்டான் ஆண்டவன்! இரணி யன் தட்டிய தூணைவிட்டு, இறை வன் வேருெரு தூணிலிருந்து புறப் பட்டிருந்தால், அந்தத் தூணில் முன் னேற்பாடாக நரசிம்மம் ஒன்றை வைத்துக் கட்டியிருந்திருப்பார்கள் என்று பிறர் சொல்லக்கூடும். பிரக லாதனே அந்தத் தூணைத் தட்டி யிருந்தால், பிரகலாதன் செய்த மாயையின் சூழ்ச்சி என்று பிறர்கூறி விடுவர். இரணியன் தட்டிய தூணை விட்டு மற்ருெரு தூணில் நரசிம்மம் வெளிப்பட்டிருந்தால், 'இறைவன் எங்கும் இருக்கிருன்!' என்ற கூற்று பொய்யாகி விட்டிருக்கும்.

நரசிம்மம் தூணிலிருந்து வெளிப் பட்டபோதே பெரு வளர்ச்சி பெற் றிருந்தது. கருவில் தங்குதல், கரு வில் வளர்தல், பிறத்தல், வளர்தல், மூப்படைதல் முதலான விகாரங்கள் அந்த மூர்த்தியிடம் காணப்படாத அற்புதமாகும். பெருவடிவத்தோடு தோன்றியும் இரணியனிடம் தோற்றுப் போயிருந்தால், 'இறை வன் பரம்பொருள்—சர்வ வல்லமை யுடையவன்!' என்று கூற நம்மால் இயலாமற்போயிருக்கும்.

'சாகாவரம் பெற்ற இரணியனை எப்படிக் கொல்லலாம்?' என்ற கேள்வியும் எழவொட்டாமல் செய்து விட்டார் நரசிம்மமூர்த்தி, அது எப்படி?

பிரம்மனுல் படைக்கப்பட்ட எந்த வுயிராலும், தேவர் மூவராலும் தனக்கு மரணம் நேரிடக் கூடாது என்று வரம் பெற்றவன் இரணியன். எனவே, மனிதவுடலும் சிங்கமுகமும் கொண்டு தானே தோன்றினுர் இறைவன்! எந்தப் படைக்கலமும் தன்னைக் கொல்லக் கூடாது என்பது இரணியன் பெற்ற பெருவரம். எனவே, தன் நகங்களைக் கொண்டே குத்திக் கிழித்தார் இறைவன்! பக லிலும் இரவிலும் சாவு நேரக்கூடாது என்ருன். எனவே, அவனை மாலைக் காலம் பார்த்து மாய்த்தார். வீட் டின் உள்ளும் புறமும் உயிர் போகக் கூடாது என்ருன். எனவே, இடைப் பட்டதான வாயிற்படிமீது வைத்தே அவனை வதம் புரிந்தார். விண்ணிலும் மண்ணிலும் மாளக்கூடாது என்ருன். எனவே, அவனைத் தன் தொடைமீது வைத்தே மாய்த்தார்.

இவை போன்ற பற்பல காரண காரியங்களைக் காணும் போது, அவன் பெற்ற வரமும் பழுது படா மல், தனக்கு எந்தவித அவச் சொல் லும் வராமல் நரசிம்மமூர்த்தி இரணி யனை வதை புரிந்த செயல் நயம்மிக்க தாக இருக்கிறதல்லவா?

பிரகலாதனின் பக்திச் சிறப்பை வெளிப்படுத்தத் தோன்றிய நரசிம் மாவதாரத்தின் கதையைப் படிப் போர் நலம் பல பெற்றுவாழ்வர்; படிக்கச் சொல்லிக் கேட்போர் பாரின் மிசைநிலவும் இன்பம் பல வும் பெற்றுப் பெரிதும் மகிழ்வர்.

நரசிம்மமூர்த்தியின் அருளைப்பெற நாமும் நாள்தோறும் "ஓம் நமோ நாராயணு!'' என ஓதி உய்வு பெறு வோமாக!

**(தொடரும்)**



இல்லை என்ற ஏக்கத்துடன் ஸ்ரீபாத ராயர் தேவர் நாமாக்களை எழுதிப் பரப்பினார் என்று ஆராய்ச்சியாளர் கள் கூறுவர். ஹரிதாச இயக்கத்தில் ஸ்ரீபாதராயர் காலம், முதல் கட்ட மாகச் சொல்லப்படுகிறது. வியாச ராயர் தாசகூடம் என்றும், ஒரு கூட் டத்தையே நிறுவி மத்வாச்சாரியரின் தத்துவத்தைப் பரப்பிய காலம் இரண்டாவது கட்டம் ஆகும். ஆந் திர நாட்டில் ஆதோனிக்கு அருகில் மந்திராலயம் என்று கூறப்படும் தெய்வத்தன்மை வாய்ந்த இடத்தில் சித்தி அடைந்த ராகவேந்திர ஸ்வாமி களின் ஊக்கத்தினால் விஜயதாசர் முதலியோர் அருளிய பெரும்பணி மூன்றாவது கட்டம் ஆகும். பிராணே சர், குருபிராணேசர் முதலியோர் அருளிய கீர்த்தனைக்காலம் நான்கா வது கட்டம் ஆகும்.

புரந்தரதாசர் வியாசராயரின் சீடர் ஆவர். நவகோடி நாரயணனாக சீரும் சிறப்புமாக வாழ்ந்தவர், எல்லா வற்றையும் துறந்து வியாசராயரின் சீடராக மாறி 4,75000 தேவர நாமாக்கள் எழுதிக் கன்னடநாட் ஆசாபாசங்களுக்கு ஆளாகி விடு கிறார். சாதாரண மனிதர்போல் துயரம் அடைகிறார். இந்தக்கருத்து கொண்ட கீழ்வரும் பாடலைக் காண் போம்.

"நல்லோருக்கு இது காலம் அல்ல. கொடியவர்களுக்கோ இது மிகவும் செம்மையான காலம்.

ஹரியைத் துதிப்பவனுக்கு கேடு விளையும் காலம் இது. பாவிகளுக்கோ நல்ல காலம். தானுண்டு தன் வீடு உண்டு என்று தன் கணவனையே நினைத்து வாழும் இல்லாளை நிந்தனை செய்யும் காலம். கெட்ட நடத்தை உள்ளவரை மனமாரப் புகழும் காலம் இது.

உபகாரம் செய்தால் அதற்கு மாறாகக் கேடு செய்யும் காலமிது. எல்லாம் அறிந்தவனுக்கோ கெட்ட காலம். மனைவி மக்களை நம்ப முடி யாத காலம்.

தர்மம் செய்வோரை நிர்மூலம் செய்யும் காலம் இது. தர்ம காரியங் களைக் கைவிட்டவர்களுக்கு மிக நல்ல காலம்''

# ★ புரந்தரதாசரின் கருத்தோவியங்கள் ★

தமிழ்மொழியில் ஆழ்வார் பெரு மக்கள் பல பாசுரங்களைப் பாடியது போல் கன்னடமொழியில் பல பக்திப் பாடல்களைப் பாடியவர் ஹரிதாசர் ஆவர். அவர்களின் பக்திப்பாடல் களுக்கு 'தேவர நாமா' என்றுபெயர். தேவர் என்றால் கடவுள். நாமா என்றால் பெயர். கடவுளின் பெயரை யும், அவருடைய ஈடற்ற அருள் வளத்தையும் விளக்கும் பாடல்கள் தேவர நாமா என்று சொல்லப்படும்.

கன்னட நாட்டில் வைணவம் செல்வாக்குடன் திகழ்ந்த காலத்தில், வைணவ ஆலயங்களில் திவ்ய பிர பந்தம் ஓதும் காலத்தில் கன்னட மொழியில் அத்தகு பாசுரங்கள் டைப் பக்திவெள்ளத்தில் மிதக்கச் செய்தவர். புரந்தரதாசர் தத்து வங்களைமட்டும் உபதேசிக்கவில்லை. சமூகத்தைக் கண் மூடித்தனமாகக் கட்டுண்ணச் செய்யும் மூடநம்பிக் கைகளை வெறுத்துப்பாடினார்; ஜாதி மதங்களுக்கு அப்பாற்பட்ட பக்தி நெறியையும், அதன் பெருமையை யும் மனமுருகப்பாடினார். அவரு டைய சில பாசுரங்களின் சிறப்புகளைக் காண்போம்.

புரந்தரதாசர் ஈடு இணையற்ற பக்தர். ஆனாலும் அவர் மானிட ஜன் மத்தை எடுத்தவர் அல்லவா? ஆத லின் அவ்வப்பொழுது அவர் சாதா ரண மானிடர்போல் உலகத்தின்

உலகத்தில் ஆசிரியர் சீடர், கண வன் மனைவி உறவுகளை நாம் அறி வோம். ஆனால் பக்தர் பெருமாளின் உறவை நாம் அறியோம். அந்த நட்பில் சினம் உண்டு; சினேகம் உண்டு; ஆழ்ந்த அன்பு உண்டு. அடங் காத சீற்றமும் உண்டு. ரங்கன்

டாக்டர். கே. சர்வோத்தமன்,
*திருப்பதி.*

தன்னை இரவும் பகலும் காப்பாற்ற வேண்டும் என்ற கவலையால் ஒரு உருக்கமான பாடலைப் பாடினார் புரந்தரதாசர்.

'ரங்கா! உன்மேல் ஆணை. என் மேல் ஆணை. எனக்கும் உனக்கும்

இருவருக்கும் பக்தர்களின்மேல் ஆணை.

உன்னைவிட்டுப் பிறரைத் தொழுதால் என்மேல் ஆணை. ரங்கா! என்னை கைவிட்டால் உன்மேல் ஆணை.

உடல், உள்ளம், செல்வம் முதலிய வற்றில் நான் வஞ்சகன் ஆனால் என் மேல் ஆணை. ரங்கா! உன் மேல் மனதை நிலைநாட்டாமல் இருந்தால் உன் மேல் ஆணை.

கெட்டவர்களுடன் நட்புகொண்டால் என்மேல் ஆணை. ரங்கா! இவ்வுலக சிந்தனைகலிருந்து என்னை விடுவிக்காவிட்டால் உன்மேல் ஆணை.''

பெரியாழ்வார் கண்ணனைப் பல வாறுகக்கற்பனை செய்ததுபோல் புரந்தரதாசரும் கண்ணனை அழகாக சித்தரிக்கிறார். அப்படிப்பட்ட பாடல்களில் ஒன்று.

'கண்ணன் தூங்கவில்லை. தாய் யசோதைக்கோ பல வேலைகள். கெஞ்சிக் கேட்டாள் உறங்கப்பா என்று. கொஞ்சி முத்தமிட்டு அறிவுறுத்தினாள். ஆனால் அவன் தூங்கவில்லை. கடைசியில் பயங்காட்டி கண்ணனைத் தூங்க வைக்கிறாள்.

''கண்ணா! அதோ பூச்சி. நீ பால் குடித்துச் சத்தம் செய்யாமல் படுத்துறங்காய்.

நான்கு முகமுள்ள பூச்சி ஒன்று கோகுலத்திற்கு ஓடி வந்து உலகத்தாரை இழுத்துக் கொண்டு அலட்டுகிறதாம்.

மூன்று கண்களுடைய பூச்சி ஒன்று ஊரூர் சுற்றி வந்து வாசலில் நின்று கொண்டிருக்கிறதாம்.

தேகமெல்லாம் கண்ணுடைய அழகான பூச்சி ஒன்று பொன்னன பிள்ளைகளைக் கண் சிமிட்டி இழுத்துச் செல்ல காத்திருக்கிறதாம்.

ஆறு முகங்கள் உடைய பூச்சி ஒன்று பன்னிரு கைகளுடன் வீரீட்டு அழும் குழந்தைகளைத் தூரமாக இழுத்துச் செல்ல நின்றிருக்கிறது.

மரத்தின் மேல் கண் உருட்டி உருட்டி பார்க்கும் பூச்சி ஒன்று சிறுவரை இழுத்துச் செல்லச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறதாம்.''

இந்தப்பாடலில் கண்ணனைத் தொழுவதற்காகப் பிரமன், சிவ பெருமான், முருகன், கருடாழ்வார் வந்திருக்கின்றனர் என்று அழகாக கூறப்பட்டது. மேலும் குழந்தையைப் பயம் காட்டித் தூங்கவைக்கும் சித்திரமும் அமைந்துள்ளது.

நாம் இவ்வுலகவாழ்வில் பல முறை விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாகிறோம். நமக்குத்தான் இந்தத் துன்பங்கள் என்று பெரும் துயரம் அடைகிறோம். நம் துயரம் நமக்குப் பெரியது. ஆனால் பக்தர்களுக்கோ உலகச்சிந்தனை எல்லாம் தம் சிந்தனைகளே. உலகத்தாரின் துயரமெல்லாம் தம் துயரமே. அத்தகு கருத்து உடைய ஒரு பாடல்-

''எங்குப் பார்த்தாலும் கவலைகளே! கவலையில்லாதவரை எங்கும் ஒருவரையேனும் காணேன்.

பிரம்மனுக்குத் தன் தலை போய் விட்டது என்று ஒரு கவலை. தான் குரங்கு ஆனேனே என்று அனுமாருக்குக் கவலை. தான் நெருப்பில் கருகிச் சாம்பல் ஆனதால் மன்மதனுக்குக் கவலை. மூன்று கண்கள் உடைய சிவனுக்கோ வீடுவீடாகச் சுற்றித்திரிந்து உண்ணவேண்டுமே என்ற கவலை. காமதேனுவிற்கோ தன்னைக் கரந்து விடுவார்களே என்று ஏக்கம். பெண்களுக்கோ உடை நகைகளின்மேல் ஒரே ஏக்கம். நாட்டை ஆளும் அரசனுக்கோ அக்கம் பக்கத்திலிருக்கும் சிற்றரசர்கள் படை எடுப்பார்களோ என்று கவலை. பாமரனுக்கோ தனக்கு வர வேண்டியது வரவில்லையே என்று கவலை. புண்ணியவான்களுக்குத் தாழ்ந்தவர் பற்றிச் சிந்தனை. பக்தர்களுக்கோ முக்தி அடையும் சிந்தனை. உறக்கம்கொள்ளாதவனுக்குராத்திரி என்றால் கவலை. திருடனுக்கோ கோழி கூவிவிடுமே என்ற கவலை. ஆனால் புரந்தரவிடலனுக்கு மாத்திரம் கவலைகளே இல்லை''

கடைசியாக புரந்தரதாசரின் தத்துவப்பாடல் ஒன்றினைக் காண்போம்.

''அக்கா! கேட்டாயோ! இந்தச் சேதியினை! உன்பேச்சைக்கேட்டு நான் ஒரு சிறு கிளியைக் கூட்டில் வைத்து வளர்த்தேன். நான் இல்லாத போது ஒரு பூனை அதைக் கவ்விக்கொண்டு போய் விட்டது. நாமும் வளர்ப்போமே என்ற ஆசையினால் அன்புடன் ஒரு கிளியை வளர்த்தேன். முத்துச்சரத்தை அதன் கழுத்திலிட்டேன். அம்முத்தைக் கொண்டு கிளி தன் வழியே தான் சென்று விட்டது. பச்சைநிறக்கிளி அது; சூட்டிகையானது அது; ராம, ராம என்று கீச்சிடும் கிளி அது; மென்மையான உடல்கட்டுள்ள கிளி அது. ஒன்பது வாசலுள்ள வீட்டில், சந்தடி மிகுந்த வேளையில் கம்பம் உடைந்து கீழேவிழ ஆகாயம் நோக்கிப் பறந்து விட்டது.''

இந்தப்பாடலில் பூனை மரணத்தைக் குறிக்கும். மரணம் எவ்வழி வருமோ தெரியாது. அதேபோல் பூனை மெல்ல வந்து கிளியைக் கவ்விச் சென்றது என்று பொருள். ஒன்பது வாசல் என்பது மனித உடம்பைக் குறிக்கும். ராம, ராம என்று இனிமையாக கீச்சிடும் கிளி பக்தனைக் குறிக்கும்.

பக்தர்கள் தமக்காக வாழ்வதில்லை, உலகத்தாருக்காக வாழ்கிறார்கள். புரந்தர தாசர் உலகுக்காக வாழ்ந்த உத்தமர்.



# கண் எதிரே இரு தெய்வங்கள்

திரு. கே. சந்தானம்
பூம்புகார்.

கௌசிகன் என்று ஒரு முனிவர் இருந்தார். அவர் நிறைய தவம் செய்தவர். பெரிய யோகி. ஆனால் அவருடைய தவ வலிமையுடன் கர்வமும் சேர்ந்து வளர்ந்து வந்தது. சிலர் கையில் கத்தி இருந்தால் எதை யாவது அனாவசியமாக வெட்டிக் கொண்டு இருப்பர். அதைப்போலவே இவரும் தன் தவ வலிமையை பயன் படுத்திப் பார்க்க காத்திருந்தார்.

ஒரு நாள் அவர் குளக்கரையில் தன் கடமைகளைச் செய்து கொண்டு இருந்தார். அப்போது பக்கத்து மரத்தின்மீது இருந்த பறவை ஒன்று அவர்மீது எச்சம் இட்டுவிட்டது. அது அவர் மேல் பட்டதும் அவர் கண்கள் கோபத்தால் கோவைப் பழமாக சிவந்தன. பறவையை கண்களை உருட்டி முறைத்துப் பார்த்தார். அது எரிந்து சாம்பலாகியது. முனிவர் தன் தவ வலிமையை தானே மெச்சிக் கொண்டார்.

அந்தக் காலத்தில் துறவு பூண்டவர் பிச்சை எடுத்து தான் சாப்பிடுவது வழக்கம். அப்படி பிச்சை கேட்கும் போதும் மூன்று முறைக்கு மேல் குரல் கொடுக்கக் கூடாது. இவரும் அன்று 'பிக்ஷை' எனப்படும் பிச்சைக்கு கிளம்பினார். ஒரு வீட்டில் இரண்டு முறை கூப்பிட்டும் யாரும் வரவில்லை. மூன்றாவது தடவையாக 'பவதி பிக்ஷாம் தேகி' என்று குரல் கொடுத்ததும் அவசரமாக ஒரு பெண் மணி கையில் பாத்திரம் நிறைய அரிசியுடன் வெளியே வந்தார்.

கூப்பிட்டதும் வராத காரணத்தால் அவர் கண்கள் சிவந்தன. "தாமதத்திற்கு மன்னிக்க வேண்டும். கணவருக்குப் பணிவிடை செய்ததால் சற்றுத் தாமதம் ஆகியது" என்றாள் அந்தக் குடும்ப பெண் அடக்கமாக. முனிவர் சமாதானம் அடையவில்லை. 'என்னை விட இவள் கணவன் எதில் உயர்ந்தவன்' என்று நினைத்தார். "முனிவரே என்னை சபிக்க நினைக்காதீர்கள். நான் பக்ஷி இல்லை பார்வை பட்டதும் எரிந்து போக. உங்கள் கோபம் என்னை ஒன்றும் செய்யாது" என்றாள். தான் பறவையை எரித்த சம்பவம் இவளுக்கு எப்படி தெரிந்தது என்று மிகவும் அதிசயப்பட்டார்.

"அம்மா! நீங்கள் ஏதேனும் தவம் செய்தீர்களா? உங்களுக்கு ஞான திருஷ்டி எப்படி வந்தது?" என்று கேட்டார். "அவரவர் தன் கடமைகளைச் சரிவர செய்தால் ஞானம் தன்னால் வரும். ஒரு குடும்பப் பெண்ணிற்குத் தன் கணவனுக்குப் பணி விடை செய்வதுதான் முக்கியம். நான் அதைத்தான் தவறாமல் செய்கிறேன். என் பதிவிரதா தர்மம் தவறாமைதான் என்னை இந்த அளவிற்கு உயர்த்தியது" என்று கூறினாள்.

"இன்று முதல் நீங்கள் தான் என் குரு. எனக்கு உபதேசம் செய்து அருள வேணும்" என்றார் மிகமிக அடக்கத்துடன். "உங்களுக்கு உபதேசம் செய்ய என்னைவிட தகுதியானவர் ஒருவர் இருக்கிறார். ஜனக மகாராஜா ஆட்சி நடக்கும் மிதிலை என்ற புண்ணிய பூமியில் தர்ம வியாதன் என்று ஒருவர் இருக்கிறார். இனி அவரே உங்கள் குரு" என்று கூறி அவள் விடை கொடுத்தாள். அவரும் தன் கர்வம் அடங்கிவிட்டதாகக்கூறி அவ்விடம் விட்டு அகன்றார்.

ஆர்வம் காரணமாக பிக்ஷையை அத்துடன் நிறுத்தி விட்டு மிதிலையை நோக்கி வேகமாக நடந்தார். 'தனக்கே ஞானோபதேசம் செய்வதென்றால் அவர் எவ்வளவு பெரிய மகானாக இருக்க வேண்டும்! சீடர்கள் கூட்டம் புடை சூழ தனியான ஆசிரமத்தில் இருப்பார். சமாதி நிலையில் இருந்தால் அவர் கண் விழிக்க வெகு காலம் ஆனாலும் ஆகலாம். அது வரைகாத்திருந்தாலும் பரவாயில்லை' என்றெல்லாம் அவர் சிந்தனை ஓடியது.

வெகு நாள் நடந்து மிதிலாபுரியை அடைந்தார். கண்ணில் கண்டவரை எல்லாம் தர்ம வியாதனின் ஆஸ்ரம இருப்பிடத்தைப் பற்றி வினவினார். ஒருவருக்குமே தெரியவில்லை. நகரம் முழுவதும்தேடினார். பின்புநாட்டைக் கடந்து காட்டுப் பகுதிகளிலும் தேடினார். குகைகளை எல்லாம் பார்த்தார். எங்கும் தர்ம வியாதனை காண முடியவில்லை. சோர்ந்து போய் மீண்டும் நகரை அடைந்தார். அவர் கண்களில் நம்பிக்கை ஒளி குறைந்து விட்டது. ஆத்திரம் அவரை அணைத்துக் கொண்டது.

"எங்கே இருக்கிறான் அந்த தர்ம வியாதன்?" என்று அலறினார். அந்த கூச்சலைக் கேட்டுக் கூட்டம் கூடியது. "நேரே செல்லுங்கள் வியாதன் அகப்படுவான்" என்று எல்லோரும் கை காட்டிய திசையில் விறுவிறுவென கோபத்துடன் நடந்தார். அவர் சற்று நிதான மடைந்து நோக்கிய போது அவர் எதிரே ஒரு கசாப்புக் கடை இருந்தது.

ஆனால் கசாப்புக் கடைக்காரன் மகிழ்ச்சி பொங்க அவரை வரவேற்றான். "வாருங்கள் தவ சீலரே! கௌசிக முனிவரின் வரவு நல்வரவாகுக. நீங்கள் தேடி வந்த தர்ம வியாதன் சாட்சாத் நானே தான். ஒரு குடும்பப் பெண் உங்களை அனுப்பி வைத்த விபரத்தையும் நான் அறிவேன்" என்றான். இவருக்குத் தலை சுற்றியது. எதிர் பாராத பெரிய அதிர்ச்சி அவருக்கு. அவர் எதிர்பார்த்தது என்ன! இங்கு நடப்பது என்ன!

ஒருவாறு வியாபாரத்தை முடித்துக் கொண்டு அவரையும் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். வீடா அது! சிறிய ஓலை குடிசை. கோழிகள் குறுக்கும் நெடுக்குமாக ஓடிக்கொண்டிருந்தன. திண்ணையில் ஒரு ஆடு எட்டிப் பார்த்தது. ஒரு புது பாயைப் போட்டு அவரை அமரச் செய்து விட்டு, உள்ளே சென்றான்.

நேரத்துடன் அவர் பொறுமையும் சேர்ந்து கரைந்தது. உள்ளே போனவன் இன்னும் என்ன செய்து கொண்டிருக்கிறான்! உள்ளே பேச்சுக் குரல். பாத்திர சப்தங்கள் எல்லாம் கேட்டன. அவருக்கு எரிச்சலாக இருந்தது. ஒரு விதமாக வெகு நேரம் கழித்து அவன் வெளியே வந்தான்.

"தாமதத்திற்கு மன்னிக்கவும். அடியேன் மீது கோபம் வேண்டாம். எனக்கு எப்படி இவ்வளவு ஞானம் வந்தது என்று சிந்திக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்."

"நான் காலை எழுந்ததும் என் வயதான தாய் தந்தைக்குப் பாத

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

பூஜை செய்வேன். அவர்களுக்கு பணிவிடை செய்வதே என் முதல் முக்கிய வேலை. அவர்கள் மகிழ்ச்சியில் என் மன நிம்மதியைக் காண்கிறேன். எனக்கு ஞானம் வர ஆரம்பித்தது. இப்போது கூட அவர்களுக்கு உணவு படைத்து வந்ததால்தான் கால தாமதம். என்னைப் பொறுத்த வரை என் தாயும் தந்தையும் என் கண்ணெதிரே தென்படும் இரு தெய்வங்கள். பெற்றவரை உதாசீனம் செய்பவர்களை தெய்வம் எப்போதும் தன் பக்தனாக ஏற்றுக் கொள்வதில்லை. தெய்வத்தைக் கூட தாய் தந்தை உறவு முறை வைத்து தான் அழைக்கிறோம்''

வியாதன் மேலும் சொல்லிக் கொண்டே போனான். முனிவரின் கண்களில் இருந்து நீர் வழிய ஆரம்பித்தது. முனிவரது வயதான பெற்றோரைக் கவனிக்க இவரைத் தவிர வேறு யாரும் இல்லை. அவர்களை தனியே தவிக்க விட்டு இவர் கடவுளைத் தேடி சந்நியாசம் வாங்கிக் கொண்டார். அதை நினைத்து இப்பொழுது வருந்தினார்.

தர்ம வியாதன் தொடர்ந்தும் பேசினான். ''இந்த துறவறத்தை துறந்து இப்போதே இல்லறம் செல்லுங்கள், தாய் தந்தையை நல்ல படியாகக் கவனியுங்கள். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பதை உணர்ந்தால் கடவுளின் பரிபூர்ண அனுக்ரஹம் அந்த வினாடியே கிடைக்க ஆரம்பிக்கும். துறவறம் கடைசியாக வாழ்க்கையின் இறுதி பாகத்தில் மேற்கொள்ள வேண்டியது. இப்போது தேவையில்லை. அதனால் உடனே வீடு திரும்புங்கள். உங்கள் அன்னையும் தந்தையும் நம்பிக்கையையே உணவாகக் கொண்டு உயிரை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். அவர்களைக் காப்பது உங்கள் கடமை. இதுவே என் அறிவுரை'' என முடித்தான்.

அதை அப்படியே குரு மொழியாக ஏற்று வீடு திரும்பினார் முனிவர். அவர் மனத்தை அழுத்தி வந்த பாரம் நீங்கி மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார். தியானமும் நல்ல முறையில் கை கூடி கடவுளின் கருணை கடாக்ஷத்திற்கு பாத்திரர் ஆனார் என்பதைக் கூறவும் வேண்டுமோ!

மஹாபாரதம் ஆரண்ய பர்வத்தில் உள்ள இந்தக் கதை சொல்லும் நீதி ''பெற்றவர்களைக் காப்பது புத்திரர் கடமை.'' என்பதே!

★

# இதிஹாஸத்தில் 18-ம் 7-ம்

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் ।
தேவிம் ஸரஸ்வதிம் வ்யாஸம் ததோ ஜயம் உதிரயேத் ॥

நரநாராயணர்கள் ஸரஸ்வதி தேவி, வியாஸர் ஆகியோரை வணங்கி பிறகு ஜயம் என்ற மஹா பாரதத்தைக் கூறுவாயாக என்பது பாரத பிரார்த்தனா ச்லோகம்.

மஹா பாரதத்திற்கு ஒரு பெயர் ஜயம் என்பது. இஃது கடபயாதி எண் சங்கேதப்படி 18 என்ற எண்ணைக் குறிக்கும். இந்த 18 என்ற எண் மஹாபாரதத்தில் எத்தனை தொடர்பு கொண்டுள்ளது என்பதை நோக்குவோம். மஹாபாரத நூல் பதினெட்டு பர்வங்களை உடையது. பாரதப்போர் நடந்த நாட்கள் பதினெட்டு. போரில் பங்கு கொண்ட ஸேனைகள் பதினெட்டு. அக்ஷௌஹிணீ என்பர். மஹாபாரதத்தின் உயிரெனத் திகழும் பகவத் கீதை பதினெட்டு அத்யாயங்களை உடையது. இது போலவே ஸ்ரீ ராமாயணத்தில் ஏழு என்ற எண்ணின் ஆதிக்கத்தைக் காண்கிறோம். ஸ்ரீராமபிரான் அவதாரவரிசையில் ஏழாவதாகத் திகழ்கிறான். அவனுடைய அவதார நக்ஷத்திரம் புனர்வஸு இஃது ஏழாவது நக்ஷத்திரம் அவனுடைய சரிதத்தைக் கூறும் ஸ்ரீ ராமாயணம் ஏழு காண்டங்களை உடையது. இந்நூல் ஏழு காண்டங்களிலுள்ள வேதத்தின் உபப்ரும்ஹணம் (பொருள் விளக்கம்) என்பர் ஆன்றோர். ராமபிரான் சுக்ரீவனுக்கு நம்பிக்கையூட்ட துளைத்த மராமரங்கள் ஏழு. ராமன் வனவாஸம் ஏற்று முடித்தது ஏழிரண்டாண்டுகள். இஃது ஏழின் மடங்கு. ஸ்ரீ ராமாயண பாராயண முறைகளை விரிவாகப் பேசும் ஸனத்குமார ஸம்ஹிதை ஸுந்தர காண்ட பாராயணத்திற்குச் சிறப்பாக ஸப்த (ஏழு) ஸர்க்க பாராயணத்தையே விதித்தது. இராம இராவண யுத்தம் நடந்தது ஏழு நாட்களே. ஸப்த ரிஷிகள் ஒவ்வொருவரும் ஒரு ச்லோகமாக யாத்துக் கோத்த ஸப்தர்ஷி ராமாயணம் ஏழு ச்லோகங்களால் ஆனது. குசலவர்கள் இந்நூலை ஏழிசையின் இனிமை வெள்ளம் புரண்டோட இசைத்தனர் என்பர். ஸ்ரீ ராமாயணம் ஏழு சுத்த ஜாதி இசையமைப்பால் யாக்கப் பட்டது என பால காண்டம் 4-வது ஸர்க்கம் கூறுகிறது.

குகனொடும் ஐவரானோம் முன்பின்
குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானோம் எம்முழை
யன்பின் வந்த
அகனமர் காதலைய! நின்னொடும்
எழுவரானோம்
புகலரும் கானந்தந்து புதல்வரால்
பொலிந்தானுந்தை

என்று கம்பர் ராமபிரான் அடைந்த மூன்று அதிகத் தம்பிகளைப்பற்றி அழகாகக் கூறுகிறார். 'நகரில் நாங்கள் நால்வர் தசரததனயர்களாகப் பிறந்தோம். நான்கு புத்திரர்களைப் பெற்ற வளவிலும் நிறைவுள்ளங் கொள்ளாத சக்ரவர்த்தி எங்களைக் காட்டுக்கு அனுப்பினன். ''நீங்களிருவரும் காடு சென்று இன்னமும் சில தம்பிமார்களை சம்பாதித்து வாருங்கள்'' என்றே எங்களைக் கானகம் போகவிட்டார். அப்படியே நாங்கள் பல தம்பிகளைச் சம்பாதித்துக் கொண்டோம். கங்கைக் கரையில் குகனைத் தம்பியாகப் பெற்றோம். பம்பைக் கரையில் சுக்ரீவனைத் தம்பியாகப் பெற்றோம். விபீஷணா! இந்தக் கடற்கரையிலே உன்னைத் தம்பியாகப் பெற்றோம். ஆக நம் தந்தை ஏழு பிள்ளைகளைப் பெற்றானயினன்' தயரதனை எந்தை என்னாது உந்தை என்று கூறும் நயம் நினைந்தின்புறுதற்குரியது. இங்ஙனே மேலும் கூர்ந்து நோக்குவார்க்கு மேலும் பல பொருத்தங்கள் கிடைக்கக் கூடும்.

(அருண் மொழிச் செல்வன் திருக்குடந்தை பதுமநாபன் அவர்களின் உபந்யாஸத்திலிருந்து கேட்டது தம்பு கிருஷ்ணஸ்வாமி - சென்னை.)

★

# சிறுவர் சோலை

# குறுக்கெழுத்துப் புதிர்

திரு. கெ. கி. சத்தியநாராயணன்-கோவை.

**மேலிருந்து கீழ்**

1. வில்லுக்கு......
ு. கவிச் சக்கரவர்த்தி
4. வாகனங்களில் நீளமானது
5. கஞ்சன் நிலைமாறி இருக்கிறான்
7. பாவிகள் செல்லுமிடம்
8. இமயத்திலுள்ள விஷ்ணு தலம்
12. தந்தை

**இடமிருந்து வலம்**

1. மஹாபாரதம் எழுதியவர்
2. ஸ்ரீராமனின் மாமனார்
5. புண்ணிய நதி
6. கேரளாவில் புனித ஸ்தலம்
7. கர்னாடகாவில் பிரசித்தி பெற்ற சிவாலயம் உள்ள ஊர்
9. சிவனுக்கு இப்படியும் ஒரு பெயர்
10. சங்கரன் மனைவி
11. விநாயகரின் ஐந்தாம் கரம்
13. இந்தியாவின் வடக்கிலுள்ள நாடு.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | ச | | × | 2 | | 3 க | |
| ஜ | × | × | × | 4 பு | × | × | | × |
| | × | 5 க | | | × | 6 ச | | |
| ன் | × | | × | வ | × | × | ர் | × |
| × | 7 | ஞ் | ச | | | டு | × | 8 |
| 9 | | ன் | × | டி | × | × | × | த் |
| | க | × | × | × | 10 | | க | |
| 11 | | 12 பி | | கை | × | × | × | நா |
| × | × | | × | × | × | 13 தி | | |

## வினா - விடை

( பாலா தாஸன் – சூர்யனார் கோயில் )

1) திருவண்ணாமலையில் உள்ள ஸ்ரீ அருணாசலேச்வர லிங்கம் பஞ்சபூத தத்துவங்களில் எதைச் சேர்ந்தது ?

2) வேதாந்த விளக்கம் தரும் முக்கியமான நூல் எது ? இதை எழுதியவர் யார் ?

3) "ஆகமம்" நமக்கு எதைப் போதிக்கிறது ?

4) இதிஹாச நூல்கள் எவை ?

5) தேவீ மஹாத்மியத்தின் சுலோகங்களின் எண்ணிக்கை எவ்வளவு ?

6) உபயவேதாந்தம் எனப்படுவது யாது ?

7) ராமானுஜர் எந்த ஊரில் விஷ்ணு ஆலய மதில் மீது அமர்ந்து "அஷ்டாக்ஷர" மஹாமந்திரத்தை எல்லோருக்கும் உரக்கக் கூவி அதன் பெருமையை விளக்கினார் ?

8) திருமலையில் கோவில் கொண்ட ஸ்ரீவேங்கடேஸ்வரர் மீது, தெலுங்கு பாஷையில் கவிகள் இயற்றிய 15-ம் நூற்றாண்டு கவிஞரும், பக்தரும் யார் ?

9) மனித வாழ்வில் அனுசரிக்க வேண்டிய நான்கு வகை ஆச்ரமங்களின் பெயர்கள் என்ன?

10) வைஷ்ணவ ஆகமங்கள் எத்தனை ? அவைகளின் பெயர்கள் என்ன ?

### வினா - விடைகள்

1. அக்னி தத்துவம்.
2. ப்ரஹ்மசூத்திரம் - வேதவியாசர்.
3. ஆலயங்கள் அமைக்கும் முறைகள, அர்ச்சா விக்ரஹங்களின் லட்சணங்கள், அவைகளின் வழிபாட்டு முறைகள்.
4. ராமாயணமும், மஹாபாரதமும்.
5. 700.
6. நாலாயிர திவ்யபிரபந்தமும், சம்ஸ்கிருத உபநிஷத்துகளும்.
7. திருக்கோஷ்டியூர்.
8. அன்னமாச்சார்யா.
9. ப்ரஹ்மச்சரியம், கார்ஹஸ்த்யம் அல்லது க்ரஹஸ்தாச்ரமம், வானப்ரஸ்தம், சன்யாசம் என்பன.
10. இரண்டு. பாஞ்சராத்ரம், வைகானஸம்.

### புதிர்களுக்கு விடை

| மேலிருந்து கீழ் | இடமிருந்து வலம் |
|---|---|
| 1. விஜயன் | 1. வியாசர் |
| 2. கம்பர் | 2. ஜனகர் |
| 4. புகை வண்டி | 5. கங்கை |
| ு. கசஞ்ன் (கஞ்சன்) | 6. சபரி |
| 7. நரகம் | 7. நஞ்சண் கூடு |
| 8. பத்ரி நாத் | 9. ஹரன் |
| 12. பிதா | 10. சங்கரி |
| | 11. தும்பிக்கை |
| | 12. திபேத் |



# ஸம்ஸாரம்



திரு. சி. எஸ். மணி
சென்னை — 28.

இந்துமத நிகண்டினில் 'ஸம்ஸாரம்' எனும்சொல் மிக்கபொருள் பொதிந்ததாகும். நம் அனைவர்க்கும் இது பழக்கமுள்ள சொல். என்றாலும் அதன் பொருளை இன்னதென வரையறுத்துக் கூற நாம் அறியோம். அதனைத் தளர்த்தி, உலகம் என்றோ உலக வாழ்க்கை என்றோ பொருள் பட அச்சொல்லை வழங்குகிறோம். 'செல்லுதல்' என்னும் பொருள் படும் 'ஸ்ரி' என்னும் வடமொழித் தாதுவினின்றும், மிகுதிப் பொருளை யுணர்த்தும் 'ஸம்' எனும் உபசர்க்கத்தினின்றும் அச்சொல் பெறப் படுகின்றது. இவ்வுலகத்தின் வழியாகவும் ஏனைய சூட்சும உயர்தர உலகங்கள் வழியாகவும் திரும்பத் திரும்ப நாம் செல்ல வேண்டியவரா கிறோம் என்று நமது சாஸ்திரங்கள் நமக்குப் போதிக்கின்றன. கீதை 8-வது அத்தியாயத்தில் 16-வது சுலோகம் பின்வருமாறு இருக்கின்ற தல்லவா?

'' ஆப்ரஹ்ம புவனால்லோகா:
புனராவர்த்திநோர்ஜுன
மாமுபேத்ய து கௌந்தேய
புனர்ஜன்ம ந வித்யதே ||

ஆகையால் 'ஸம்ஸாரம்' என்னும் சொல்லின் உண்மைப் பொருளாவது மீண்டும் மீண்டும் ஆன்மாக்கள் இவ்வாறு செல்லுதலே (ஸம்ஸ்ருதி).

இந்துமதம் முழுமையும் இந்த 'ஸம்ஸாரம்' என்னும் கருத்தினை நிலையாகக் கொண்டுள்ளது. வாழ்க்கையைப் பற்றிய இந்துமதக் கருத்து முழுமையும் அறிய அது துப்புத் துலக்குகிறது. மரணமடைந்த நமது உறவினர்களுக்குப் பிண்டம் அளிப்பதேன்? சூட்சும உலகங்களில் ஏதாவது ஒன்றிலோ இவ்வுலகிலோ வேற்றுடல்களில் சிலவற்றில் அவர்கள் இன்னும் வாழ்ந்து வருகின்றனர் என்ற நமது நம்பிக்கையே அதற்குக் காரணம். இந்துக்கள் புண்ணியச் செயல்களை செய்கின்றனர்; ஏனெனில் இவற்றால் மரணத்திற்கு பிறகு அவர்களுக்குப் பெரும் போகம் விளையும். அவர்கள் பாவச் செயல்களை விலக்க முயலுவதின் காரணம், மரணத்துக்குப் பின் நரக வேதனையை ஒழித்தற் பொருட்டேயாகும். இவையும் இன்னும் பல ஏனைய நம்பிக்கைகளும் கிரியைகளும் மறுபிறவியென்னும் இந்துமதக் கருத்தினின்றும் பெறப்படும். இக்கருத்து பொய்யாக புனைந்த ஒன்றன்று. இந்து மதத்தைச் சேர்ந்த ரிஷிகள் நமது மெய்யுணர்வால்கண்ட உண்மைகளே இதற்கு ஆதாரமாகின்றன.

ஆதலால் மறுபிறவியென்னும் இக்கருத்து, வாழ்வைப்பற்றிய இந்து மதக் கொள்கையின்படி மிக முக்கியமானதாகும்; இது பற்றி, இந்துமத ஆராய்ச்சியில் இனிமேற் செல்லுமுன் இக்கருத்தைத் தெளிவாக மனத்தில் கொள்ளவேண்டும்.

இறந்தபின் நாம் இல்லாமல்போவதில்லை. இப்பிறவிக்கு முன் நாம் அனைவரும் எண்ணரிய பிறவிகளைப் பெற்றுள்ளோம். கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணன், அருச்சுனனை நோக்கி ''அருச்சுனா, நீயும் நானும் இதற்கு முன் பல பிறவிகள் எடுத்துள்ளோம் (ஆனால் ஒன்று) அவற்றையெல்லாம் நான் அறிவேன், நீ அறிகிலாய்'' என்று போதித்துள்ளார். (கீதை 4—5)

'' பஹூனி மே வ்யதீதானி
ஜன்மானித வ சார்ஜுன
தாந்யஹம் வேத ஸர்வாணி
ந த்வம் வேத்த பரந்தப ''

என்று கூறுகிறார். அவர் மீண்டும் கூறுவதாவது: பிறந்தவன் சாவது உறுதி; இறந்தவன் பிறப்பதும் உறுதி உண்மை யாதெனில், உள்ளடங்கிய தெய்வத்தன்மை முழுவதும் வெளிப்படும் வரை ஒருவன் மீண்டும் மீண்டும் இவ்வுலகில் பிறக்கிறான்; ஒவ்வொரு முறையும் ஒரு புதுஉடலோடு பிறக்கிறான்; அது சிறிது காலம் தங்கப் பின்னர் உயிரற்று வீழ்கின்றது. ஆனால் உடலினுள் உறையும் பொருளோ யாண்டும் புதுமையொடு திகழ்கின்றது. சீரழிந்த பயனற்ற உடலினின்றும் அது வெளியேறி சூட்சும உலகங்களில் சிறிது காலம் தங்குகின்றது. அதன்பின் அது இவ்வுலகிற்கு மீண்டும் ஒரு புதிய உடலைப் பெறுகிறது. சூட்சும உலகங்கள் பெரும் போகத்தையோ துயரத்தையோ அளித்ததற்காக அமைந்துள்ளன. இக்காரணம் பற்றியே அவை 'போகபூமி' எனப்படும். ஒவ்வொருவனும் தனது பூரணத்தன்மையை வெளிப்படுத்துதற்காக வரவேண்டியது இவ்வுலகிற்கேயாகும். இக்காரணத்தால் இவ்வுலகம் 'கருமபூமி' எனப்படும். ஒருவன் பூரண நிலையை அடையாத வரையில் மாறி மாறிப் பல பிறப்புப் பிறக்கும் கட்டுக்கு உட்பட்டவனாவான். அது வரை அவன் பந்த நிலையில் உள்ளவன். மீண்டும் மீண்டும் உலகங்கள் வழியாக செல்லும் அவசியமே பந்தமாகும்.

பிறக்குந்தோறும் நாம் புதிய உடலொன்றைப் பெறுகிறோம். இவ்வுடல் ஜடப்பொருளால் ஆனது; 'ஸ்தூல சரீரம்' என அது பெயர் பெறுகின்றது. உணவு வடிவமாக உட்கொள்ளப்படும் பொருள்களிலிருந்து அது உண்டாக்கப்படுகின்றது; இக்காரணத்தால் 'அன்

னமய கோசம்' எனவும் பெயர் பெறும். இந்த ஸ்தூல உடல், அனைத்திற்கும் வெளியேயுள்ள நமது உறை. வீடு இடிந்து விழும்போது ஒருவன் அதனின்றும் வெளியேறி வசிப்பதற்காக வேறொரு வீட்டைக்கட்டுகிறான். அதுபோல், இந்த ஸ்தூலவுடல் பயனற்றதாகும்போது, ஒருவன் அதை கழித்து புதியதோர் உடலை அமைத்துக் கொள்கிறான். கீதையில் இந்த உடல் நல் ஆடைக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. ஆடை நைந்ததும், ஒருவன் அதை தள்ளிவிட்டு அணிதற்குப் புதியதொன்றைப் பெறுகின்றான்; அதே போல், உடல் பயன் படா தொழிந்தும், ஒருவன் அதை விட்டு நீங்கிப் புதிய உடலில் மறுபடியும் தோன்றுகின்றான். (கீதை 2-22)

'' வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய
நவானி க்ருஹ்ணாதி நரோ‌ऽபராணி
ததா ஸரீராணி விஹாய ஜீர்ணான்
யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ.''

என்று கூறுகிறது. சீர்கெட்ட பயனற்ற உடலை இங்ஙனம் விடுதலே இறப்பெனப்படும்; புதிய உடலில் மீண்டும் தோன்றுதல் பிறப்பெனப் படும். ஆக இறப்பாலும் மறுபிறப்பாலும் நாம் செய்வது நைந்த உடல்களை மாற்றி புதிய உடல்களை அணிந்து கொள்ளுதலே. நாம் ஒவ்வொருவரும் இதனை எண்ணிலாத தடவைகள் இயற்றியுள்ளோம். இவ்வுண்மையை அறிவார்க்கு அஞ்சுதற்கோ துயருறுவதற்கோ ஏதுவொன்றும் இல்லை.

இந்த ஸ்தூல உடலுக்குள்ளே நாம் வாசம் பண்ணும் வேறோர் உடல் அதனினும் சூட்சுமமும் வலிமையும் மிக்கவாய் உள்ளது. இது சூட்சும ஸரீரம் எனப்படும். நோயும் மூப்பும் இறப்பும் இச்சூட்சும உடலைத் தொட இயலாது. இயற்கையிலுள்ள எதுவும் அதனை அழிக்கவொண்ணாது. கழிந்த காலத்து நாம் எடுத்த எண்ணற்ற பிறவிகளிலும் நம் சூட்சும உடல்கள் நம்மிடம் மாறாத தோழமை பூண்டு வந்துள்ளன.

சூட்சும உடலிலே பதினேழு பகுதிகள் உள்ளன: அவையாவன:- புத்தி, மனம், ஐந்து பிராணன்கள் (உயிர்ச் சக்திகள்) மற்றும் பத்து இந்திரியங்களின் சூட்சுமப் பிரதிகளும். (பத்து இந்திரியங்களாவன:மெய்,வாய்,கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும்; நாவு, கை, கால், மலவாயில், ஜனன உறுப்பு என்னும் கருமேந்திரியங்கள் ஐந்தும்). இந்த சூட்சும உடலே ஸ்தூல உடலை அமைத்து அதனை இயங்கச் செய்து கொண்டிருக்கிறது. அதன் வாயிலாகவே நாம் உணர்கிறோம், நினைக்கிறோம். இச்சிக்கிறோம். உண்மையாகவே இந்த சூட்சும உடலே நம்மிடத்துள்ள சுறுசுறுப்பான பகுதியாகும்.

ஆயினும் சூட்சும உடல் தானே சுறுசுறுப்புள்ளதன்று. ஸ்தூல உடலுக்கு உயிரூட்டி அதனை இயக்குவிப்பது சூட்சும உடலேயாயினும், இதுவும் அதைப்போன்று ஜடப் பொருளே. அதற்கும் உயிரூட்டி அதனை இயக்குவிப்பது வேறொன்றே. இதுவே மனிதனிடத்துள்ள மெய்ப் பொருளாகும். இதுவே அவனது ஆன்மா.

ஆத்மனே எல்லா உயிருக்கும் இயக்கத்திற்கும் சைதன்யத்திற்கும் மூலமாகும். அது தொட்டுக் கொண்டிருப்பதால் உயிரூட்டப் பெறும். சூட்சும உடல் ஸ்தூல உடலுக்கு உயிரளிக்கிறது; சூரியனால் ஒளியூட்டப் பெறும் சந்திரன் இப் பூமிக்கு ஒளி வழங்குவதைப் போல அது.

இவ்விதம் ஆத்மாவால்' உயிரூட்டப் பெறும் சூட்சும உடல் ஸ்தூல உடலை இயன்ற காலம் வரை இயக்கி வைத்து பின்னர் அதனை கழித்து ஒரு புதிய உடலை அமைத்துக் கொள்கிறது. இவ்வாறு ஒரு பிறவியினின்றும் மறு பிறவிக்கு அது செல்கின்றது.

ஆனாலும் ஒருவன் மீண்டும் மீண்டும் பிறக்கவேண்டியதேன்? இந்து சாஸ்திரங்கள் இதுபற்றி மிகத் தெளிவான கருத்துடையன. மனம் மாசற்றுத் தூய்மையாகும் போது தான் மனிதனிடத்திலுள்ள தெய்வத் தன்மை தானே தன்னை வெளிக் காட்டுகிறது. ஆனால் இதற்கு மிக மிக நீண்ட காலம் பிடிக்கும். ஒரு ஸ்தூல உடல் வெகு காலம் நிலைக்க இயலாது. நமது வாழ்நாளோ இப் பணியை நிறைவேற்றப் போதிய அளவினதாகாது. இக்காரணம் பற்றியே இப்பணியை ஆற்றுமுன் எண்ணற்ற பிறவிகளை நாம் எடுக்க வேண்டியுள்ளது.

நம் புலன்களுக்குக் களிப்பைஊட்டுவனவாய் எத்தனையோ பல பொருள்களும், அவைகட்கு வெறுப்பை ஊட்டுவனவாய் எத்தனையோ பலவும் இவ்வுலகில் உள்ளன. அதனால் சில பொருள்களைப் பெறும் விருப்பமும் வேறு சிலவற்றை விலக்கும் விருப்பமும் நாம் உடையவராகிறோம். நமது

(24-ம் பக்கம் பார்க்க)

அன்பனே !

உலகில் சிறந்த பொருள்கள் ஒன்றோடு ஒன்று கூடுவதனால் ஒரு இனிமை, சுகம் உண்டாகின்றது. பாலுந் தேனும் கூடுவதனால் சுவை அதிகப் படுகின்றது; உணவுப் பொருள்களும் ஒன்றோடு ஒன்று கூடி சுவையாகின்றது. அதேபோல் கணவனும் மனைவியுங்கூடி இன்புறுகின்றனர். அந்த இன்பம் அனுத்துணையாயது. இனி பரம் பொருளாகிய பதியுடன் ஆன்மா கூடுவதனால் வரும் இன்பமே பேரின்பம். அந்த இன்பத்தையடைய முயற்சி செய். இறைவனோடு ஏகபோகமாய் இருக்க.

—திருமுருக கிருபானந்த வாரியார்.




*(பிறப்பு மட்டுமே மக்களை உயர் சாதிக்குரியவராக்கி விடுவதில்லை; தவமே அவர்களை உயர் வகுப்பினராக மாற்றுகிறது. ஒருமுனைப்பட்ட உள்ளத்துடன் நெக்குருகிக் கனிவுடன் பக்திசெய்வோரை, எவ்வகை வேற்றுமைக்கும் அப்பாற்பட்ட இறைவன் ஆட்கொண்டு அருள் புரிந்த வரலாறுகள் எத்தனை எத்தனையோ! தூய்மையான இறையன்பின் ஏற்றத்தை மனம் நெகிழும்வகையில் சித்தரிக்கிறது கானோபத்திரையின் கதை)*

# மரமாகி நின்ற மங்கை

மகாராஷ்டிர மாநிலத்தில் மங்கலபட என்ற ஒரு சிற்றூர். அங்கு மேளக்காரச் சாதியில் தோன்றியவள் சியாமா. இசை வேளாளர் வகுப்பினருக்குரிய ஆடல், பாடல் கலைகளில் தேர்ந்து விளங்கியவள். அழகிற்சிறந்த அப்பெண்மணி, தேவனுக்கே தாசியாகி தேவதாசியாக வாழ்க்கை நடத்தினாள் அவள். கண்ணைக் கவரும் அவளது எழிலுருவத்திலும் கருத்தை ஈர்க்கும் அவளுடைய கானத்திலும் மயங்கியவர் பலர். செல்வபோகத்துடன் அரசி போல் வாழ்ந்தாள் அந்த ஆடலழகி.

சியாமாவின் அழகிய் பெண் கானோபத்திரை. அழகிலும் சரி, கானம், நர்த்தனம் முதலிய லலிதகலைகளிலும் சரி அன்னையையும் மிஞ்சியிருந்தாள் அவள். தாய்மனம் பெருமகிழ்ச்சி அடைந்ததில் வியப்பு ஏது?

மகள் தக்க பருவம் எய்தினாள். மங்கையின் கலைச்சிறப்பை வெளிப்படுத்தும் பொருட்டு அரசவையில் அரங்கேற்றத்திற்கு ஏற்பாடுசெய்ய விரும்பினாள் சியாமா. அரசனின் ஆதரவு கிடைத்து விட்டால் மகளின் வாழ்வும் மணம் வீசித் திகழ்ந்து இன்பமாய் இருந்துவிடும் என்பதும் அவளது எண்ணமாக இருந்தது.

தாயின் மனவோட்டத்தை அறிந்த மகள் அவளிடம் சென்று "அம்மா பரிவுடனும் பாசத்துடனும் என்னைப் பெற்றுவளர்த்த அன்னை நீ. எனது நன்மைக்காகவே இந்த அரங்கேற்றத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிறாய் என்பதை நான் அறியாமலில்லை. ஆனால் என் மனம் வேறுவிதமாக நினைக்கிறது. நாம் பயின்ற அருங் கலைகள் யாவும் அகில சராசரங்களுக்கும் அதிபதியான ஆண்டவனுக்கே உரியவையே அன்றி, மனிதர்களுக்காக அல்ல. எனக்கு வேண்டாம் இந்த இழி தொழில். வெறும் உடலின்பத்தினாலும் மகிழ்வு நிறைந்த உலக வாழ்வினாலுமே என்மனம் நிறைவு அடையப் போவதில்லை. என் கலைகள் எல்லாம், ஏன், நானேகூட இறைவனுக்கே உரிய பொருள்கள். எனவே, என்னை மன்னித்துவிடு. எவனை அடைந்தால் எல்லாவற்றையும் அடைந்துவிட முடியுமோ அப்பரம்பொருளுக்கே என்னைக் காணிக்கையாக்கிவிட்டேன்" என்று கூறினாள்.

மகளின் சொற்களைக் கேட்ட சியாமா தன் மனதைத் தேற்றிக் கொண்டாள்; ஒருவகையில் மகிழ்ச்சி கூட அடைந்தாள். தன் குலத் தொழில் தன்னோடு முடிந்துவிடும் அல்லவா! ஆயினும், இளம் வயது மகளின் மனஉறுதியில் அவளுக்குச் சற்று ஐயம் ஏற்பட்டது என்னவோ உண்மை! மகளின் நல்வாழ்விற்காக ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்து கொண்டாள் அவள்.

அதுசமயம், பக்தனுக்காகக் கால் கடுக்கச் செங்கல்லின்மேல் நின்று கொண்டிருக்கும் பாண்டுரங்கன் உறையும் பண்டரிபுரம் செல்லும் அடியார் திருக்கூட்டம் ஒன்று அவ்வூருக்கு வந்தது. கானோபத்திரையும் அவர்களுடன் செல்ல விரும்பினாள். அன்னையும் சம்மதம் அளித்தாள். உவகைபொங்கப் பண்டரிபுரம் சேர்ந்தாள் கானோபத்திரை. இறைவனை மனமாரப்பாடி, இனிதாகப் பொழுதைக் கழித்து வந்தாள்.

கானோபத்திரையின் கவின் மிகு அழகில் மயங்கிய மன்னனால் அவளை மறக்கமுடியவில்லை. எப்படியாவது அவளை அடையவேண்டும் என்று எண்ணிவந்தான் அரசன். தனது நம்பிக்கைக்குரிய சிறந்த வீரர்கள் சிலரிடம் எவ்வாறாயினும் அவளைத் தன்னிடம் கொண்டுவந்து சேர்த்துவிடுமாறு கூறினான்.

வீரர்கள் பண்டரிபுரம் சென்றனர். கானோபத்திரையைச் சந்தித்து, அரசனிடம் வருமாறு அவளை அழைத்தனர். அரண்மனை வாழ்க்கையின் அருமை பெருமைகளை விவரித்தனர்; அச்சுறுத்தியும் கூறினார்கள் அவ்வீரர்கள். அவர்கள் தன்னைப் பலாத்காரமாகவும் எடுத்துச் செல்லக்கூடும் என்பதை உணர்ந்தாள் கானோபத்திரை.

**திரு. ஏ. நடராஜன் - திருப்பதி.**

"வீரர்களே! எனக்கு நீங்கள் நல்ல செய்தியே கொணர்ந்திருக்கிறீர்கள் என்பதை உணர்கிறேன். அதற்காக ஆண்டவனிடம் கடைசிமுறையாக நன்றி சொல்லிவிட்டு வந்து விடுகிறேன், இங்கேயே காத்திருங்கள்" என்று அவர்களிடம் கூறி, பாண்டுரங்கனின் சன்னிதியை அடைந்தாள். வீரர்களும் அவள் வரவிற்காகக் காத்திருந்தனர்.

(24-ம் பக்கம் பார்க்க)

# சீதாபிராட்டியும் மரிக்கொழுந்தும்

இராமாயணக் கதை தெரியாதவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவாகத் தான் இருக்கும். பாரதம் அல்லாமல் வேறு அயல்நாடுகளிலும் பிரபலமாக உள்ள ஒரே இந்திய இதிகாசம் "இராமாயணம்" ஆகும். இதில் உள்ள பாத்திரப் படைப்புகளை வால்மீகி—கம்பர் — துளசிதாஸர் முதலான கவிஞர்கள் பலவிதமாக பாடியுள்ளனர். இதேபோன்று நாதயோகி — ஸாஹித்திய சக்ரவர்த்தி, ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தன்னுடைய கீர்த்தனைகளில் ஸ்ரீ ராமபிரானை தன்னுடைய இஷ்டதெய்வமாக வணங்கி வர்ணனைசெய்து பல்லாயிரம் கீர்த்தனைகள் பாடியுள்ளார்கள். அவ்வாறு வர்ணனை செய்யும் போது சீதாபிராட்டியை மிக உயர்வான நிலையில் வைத்து பாடியுள்ளார்கள்.

"மா ஜானகி செட்ட பட்டக
மகாராஜு வைதிவி"

என்று காம்போஜி ராக கீர்த்தனையில் ஜானகியின் கரம் பிடித்த பின் தான் தசரதன் மைந்தனை ராமன் ஸீதா ராமன், கல்யாணராமன், பட்டாபி ராமன் எனும் சிறப்புப் பெயர்கள் பெற்றதாகக் கூறுகிறார். ஆகையால் வைதேகியை "ஸீதம்ம மாயம்ம" என்று பாடி பரவசம் அடைகிறார். இப்படியாக வர்ணித்த ஸீதையை ஒரு கீர்த்தனையில் 'மரிக்கொழுந்து' எனும் வாசனை மிக்க செடிக்கு ஒப்புவமை கூறியுள்ளதுதான் ஏற்றமிகு வர்ணனை ஆகும்.

"ராமா நீ சமான மெவரு
ரகுவம்ஸோத் தாரக"

என்று பல்லவியில் கூறுகிறார். ராமா! நீ ரகு வம்சத்தை உயர்வடையச் செய்ய வந்துதித்தவன் அல்லவா? ஆதவ வம்சத்தின் ஆதவனாகிய உனக்கு சமானமானவர் யார் இருக்கிறார்கள் என்கிறார். உனக்கு பல காரணங்களால் பெருமை இருந்தாலும் உலக அன்னையான ஜானகியை நாயகியாக அடைந்ததால் அல்லவோ உனக்கு இவ்வளவு புகழும் பெருமையும் சேர்ந்தது என்கிறார். பிராட்டி எத்தன்மை உடையவள் என்று அனுபல்லவியில் ஸ்வாமிகள்,

திரு. பி. கே. சுந்தரராஜன், B.A.B.T.
சேலம் டவுன்.



"பாமா மருவம்பு மொலக
பக்தியனு பஞ்ஜரபு சிலுக"

என்று கூறுகிறார். இதன் கருத்து. சீதையானவள் வாசனைமிக்க மருக்கொழுந்து போன்று பெருமை உடையவள் என்பதாகும். புஷ்பங்கள் என்று எடுத்துக்கொண்டால் ஏராளமான வாசனைப் புஷ்பங்கள் உள்ளன. ஸ்வாமிகள் தனது கீர்த்தனை ஒன்றில் "ஸரஸீருஹ—புந்நாக—சம்பக—பாடல குருவக— கரவீர— மல்லிகா— ஸுகந்த ராஜம் — விருவாஜி — பாரிஜாதம்" முதலான புஷ்பங்களைக் கூறிக் கொண்டே செல்கிறார். அப்படிப்பட்ட மகானுபாவர் சீதாபிராட்டியை மரிக்கொழுந்திற்கு ஒப்பிட்ட

தற்குக் கீழ்கண்டுள்ள சிறப்புகள் தான் காரணங்கள் ஆகும்.

**மரிக்கொழுந்தின் சிறப்பியல்புகள்**

எந்த ஒரு புஷ்பச்செடியும் வேர் பாகத்திலிருந்து தண்டு, இலை, பூ முதலான பாகங்கள் அனைத்தும் வாசனையுடன் விளங்குவதில்லை. செடிகளின் பூக்கள் மட்டும்தான் வாசனை தரும். ஆனால் மரிக்கொழுந்து எல்லா பாகங்களிலும் வாசனையுடன் விளங்குவது சிறப்புமிக்க அம்சமாகும். வேர் மட்டுமல்ல, தண்டு, கொழுந்து, பூ, பூவிலுள்ள மகரந்தம் முதலான எல்லா பாகங்களும் வாசனை வீசுவது அதிசயத்தக்க ஒன்றாகும். மற்ற பூக்களுக்கு இந்தப் பெருமை இல்லை.

இரண்டாவதாக மரிக்கொழுந்து புத்தம் புதிதாக தோட்டத்திலிருந்து வந்த போதும் கம கம என்று மணம் வீசிக்கொண்டு இருக்கும். பின்னர் வாட நேரிட்டால் வாடிய பின்னும் மணம் வீசும். இப்படியாக வாடிய பின்னும் மணம் வீசக்கூடிய மலர் எதுவும் இல்லை என்றே கூறலாம். மரிக்கொழுந்து மட்டும் விதி விலக்கு ஆகும். வாசனைக்காக புத்தகத்தின் நடுவில் மரிக்கொழுந்து வைப்பது இன்றும் வழக்கத்தில் உள்ளது.

மூன்றாவதாக மரிக்கொழுந்து செடியானது மழைபெய்யாது இருந்தால் வெய்யிலின் காரணமாக வாடும். வாடியநிலையில் சற்று சாய்ந்து இருக்குமே தவிர உயிரை விட்டு விடாது. சிறிதளவு மழை பெய்தாலும் போதுமானது. உடனே துளிர் விட்டு நிமிர்ந்துவிடும். கடுமையான வெயிலுக்கு ஈடுகொடுத்து வாடி பின்னர் உயிர் பிழைக்கும் செடி மரிக்கொழுந்து ஆகும். மற்ற புஷ்பச் செடிகளுக்கு இந்த விசேஷத் தன்மை இல்லை.

நான்காவதாக மரிக்கொழுந்தினை அனைவரும் விரும்பி மலராகவே சூட்டிக் கொள்வார்கள். தாய்க்குலம் இதனை தனியாகவே சூட்டிக்கொண்டு தங்கள் கூந்தலுக்கு மணம் உண்டாக்கிக் கொள்வார்கள். திருமணம் வரவேற்புமுதலான விசேஷ வைபவங்களில் மரிக்கொழுந்து மிகவும் விரும்பி பயன்படுத்துவதை இன்றும் காணலாம். இவ்வாறு எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கொழுந்து மரிக்கொழுந்து ஆகும். ஸ்வாமிகள் தனது கீர்த்தனையில் சீதாபிராட்டிக்கு இதனை ஒப்புவமை கூறியுள்ளதை சிறிது ஆராய்வோம்.

**சிறப்புமிகு ஒப்புவமை**

முதலாவதாக சீதாப் பிராட்டியின் பாத்திரம் மிகவும் உயர்ந்ததான தாகும். கற்பு எனும் மணம் வீசும் பாத்திரம் ஆகும். மரிக்கொழுந்தின் வேர்ப்பாகம்நிலத்தின் அடியில் இருக்கும்போதும் மணம்வீசும். மரிக்கொழுந்து போல் தந்தையாகிய ஜனகரின் அரண்மனையில் இருக்கும் போதும் புகழ் பெற்று வேர் நிலத்தில் இருப்பது போல் அந்தப்புரத்தில் வெளியுலகிற்குத் தெரியாமல் இருந்தாள். பின்னர் தனது பிராண நாயகன் சக்கரவர்த்தித் திருமகனுடன் காட்டிற்குச் செல்ல முனைந்த போதும் புகழ் மணம் பெற்றாள். அதன்படியே தலைவனுடன் கானகம் சென்ற பின்னும் மணம் பெற்றாள். வெளியுலகத்திற்குப் புகழ் மணம் வீசியது கானகம் சென்று சிறையிருந்த பின்புதான் என்பது உலகறிந்த உண்மை ஆகும். இது மரிக் கொழுந்திற்கு முதலாவதாக கூறப்பட்ட ஒப்புவமை ஆகும்.

இரண்டாவதாக மரிக்கொழுந்து வாடினாலும் மணம் வீசுவதாகும். அசோக வனத்தில் சீதாப்பிராட்டிக் சூரிய குலத்திலகத்தினை நினைந்து நினைந்து வாடி வதங்கி இருந்தாள். நாயகன் முகம் காண மாட்டோமா, சிறையிலிருந்து விடுபட மாட்டோமா என மிகவும் வாடி இருந்தாள், மழை காணாத மரிக்கொழுந்து போல. வாடிய நிலையில்தான் வைதேகியின் மணம் அதிகமாக இருந்தது. அனுமன் இலங்கை சென்று வந்ததும் சீதையின் மணம் அதிகமாகிவிட்டது. கம்பன் கூற்றுப்படி,

'இற் பிறப்பதொன்று'
'இரும்பொறை யென்ப தொன்று'
'கற்பென்ப தொன்றும்'

களிநடம் புரிந்ததல்லவா? இது மரிக் கொழுந்து வாடிய நிலையில் மணம் வீசுவதற்கு கூறப்பட்ட உவமை யாகும். மூன்றாவதாக ஜனகஸீதா அசோகவனத்தில் மிகவும் வாடி இருந்தாள். மிகமிக வாடியிருந்தாள் அன்றி உயிரை விடவில்லை. எதைப் போன்று? மரிக்கொழுந்து போன்று! இராவணன் எனும் கொடிய அரக்கனின் சுடு சொற்கள், வெப்பம் நிறைந்த பார்வை இவைகளுக்கெல்லாம் ஈடு கொடுத்து வாடி இருந்தாள் அன்றி உயிரை விடவில்லை. பின்னர் தென்றலுடன் கூடிய மாருதியின் சந்திப்பினால் தனது நாயகன் கொடுத்து அனுப்பிய கணையாழி எனும் மழை பெய்ததும் வாடிய பிராட்டி மீண்டும் புத்துயிர் பெற்று நிமிர்ந்து உட்கார்ந்தாள். நம்பிக்கை எனும் நட்சத்திரம் உதயமாகி விட்டதை அறிந்தாள். ஆகையால் மரிக் கொழுந்தாகிய பிராட்டி வாடினாள்! உயிர் விடவில்லை! சூடாமணி வடிவில் மழை பெய்ததும் உயிர் பெற்றாள் என்று தியாகராஜ ஸ்வாமிகள் புகழ்ந்து பாடுகிறார்.

நான்காவதாக அனைவரும் மரிக் கொழுந்தினை விரும்புவதாகக் கூறப்பட்டது நினைவிருக்கலாம். ஜானகியின் பாத்திரம் அகில உலகத்தில் உள்ள மாந்தர்கள் அனைவராலும் விரும்பி போற்றப்படும் பாத்திரம் ஆகும். தாய்மார்கள் போற்றி புகழும் கற்பின் அணிகலனாக பிராட்டி விளங்குகிறாள். திருமணங்களில்,

"ஸீதா கல்யாண வைபோகமே!
ராம கல்யாண வைபோகமே!"

என்று ஸ்வாமிகள் பாடி அருளிய சங்கராபரண ராக கீர்த்தனை அனைவராலும் பாடப்படுகிறது. பக்திச் சொற்பொழிவின் இடையே,

"ஜெய ஜானகீ காந்தஸ்மரனே!
ஜெய் ஜெய் ராம்! ராம்!"

என்று பக்தர்கள் கோஷமிடுவதும் ஜானகியின் நாமம்தான். அநேகர் தங்கள் குழந்தைகளுக்கு ஸீதா ராம், ஜானகி ராமன், வைதேகி, ஸீதம்மா, சீதா என்று பிராட்டியின் பெயர் வைத்து மகிழ்வதைக் காண்கிறோம். சீதை இல்லாவிட்டால்இராமாயணம் இல்லை. இராவண வதமும் இல்லை. அனுமன் பாத்திரம் தேவைப்பட்டு இருக்காது. அதற்காக சுந்தர காண்டம் ஒன்று பாடப்பட்டும் இருக்காது. இராமனின் கோதண்டத்தின் கீர்த்தி, வீர பிரதாபங்கள் எழுதப்பட்டும் இருக்காது. இராமன் முதல் பரதன் ஈறாக எல்லா பாத்திரங்களும் பெருமையும் புகழும் அடைந்தது அன்னையாம் ஜானகியின் தியாகமும் கற்பின் திண்மையால் ஆகும். மரிக்கொழுந்து போல் மணம் வீசும்படி செய்து பாடிப் பரவசம் அடைந்த, "ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள்" பாத கமலங்களை மனதாலும் சிரஸாலும் வணங்கி வாழ்த்துவோமாக!

ஸ்ரீ குருப்யோ நம:



## அறிவிப்பு

*11-2-81அன்று திருமலையில் சலகட்ல ரதசப்தமி விழா நடைபெற இருப்பதால், அன்று ஆர்ஜித சேவைகளான கல்யாணோற்சவம், பிரம்மோற்சவம், வாகன சேவை, ஊஞ்சல் சேவை, வசந்தோற்சவம், ஸகஸ்ர கலஸாபிஷேகம் மற்றும் அமந்த்ரணோற்சவம் (10-2-80 அன்று நடைபெறும் ஏகாந்த சேவை முதற் கொண்டு) போன்றன நடைபெற மாட்டா. எனினும் அன்று, குறிப்பிட்ட வாகன சேவைகள் ஏற்றுக் கொள்ளப்படும்.*

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

மனங்கள் இத்தகைய ஆசைகளால் எப்போதும் நிறைந்துள்ளன. இவ்வாசைகளைநிறைவேற்றும் பொருட்டு நாம் முயற்சி செய்கிறோம். அத்தகைய முயற்சிகளின் மயமே நமது வாழ்வு. ஆயினும் நம் ஆசைகளை ஒழித்தல் நமக்கு ஒருக்காலும் இயலாது. அவை பெருகிக் கொண்டே போவன. நாம் ஓர் ஆசையை நிரப்பும்போது நம் புலன்கட்குப் போக மெனும் பசி முன்னினும் கூரியதாகின்றது. இதனின்றும் புதிய ஆசைகள் பலப்பல விளைகின்றன. இவ்வாறு ஒய்வில்லாத நம் ஆசைகளை நிரப்புதற்காக நாம் முயற்சிகளைச் செய்து கொண்டேயிருக்கிறோம்.

இவ்விதம் நாம் செய்வது ஏதுவாகயிருந்தாலும் இன்பத்தையோ துன்பத்தையோ அது பயனாக விளைவிப்பது உறுதி. ஒவ்வொரு கர்மமும் விரைவாகவோ தாமதித்தோ அதற்குரிய பலனை (கர்ம பலனை) அளிக்கும் நியதியுடையது. ஒரு சுபகருமம் இன்பத்தை பயனாக தருவது; ஒரு தீய கருமம் துன்பத்தை விளைவிக்கிறது. மனிதரிடத்து எழும் ஆசைகள் நல்லனவாயும் தீயன வாயும் இருத்தல் இயல்பு. இவை காரணமாக அவர்கள் நற்கர்மங்களையும் தீய கர்மங்களையும் இயற்றி, அவற்றின் பயனாக இன்பம் துன்பம் இரண்டையும் இவ்வாறு குவித்துக் கொண்டே போகின்றனர்.

ஒவ்வொரு பிறவியிலும் நமது பழைய கர்மப் பயனின் ஒரு பகுதியை மட்டும் ஒழித்துவிடுகிறோம். இப்பகுதி 'பிராரப்தம்' எனப்படுகிறது. பின்வரும் பிறவிகளில் நுகர்தற்குரிய மிச்சப்பகுதி 'சஞ்சிதம்' எனப்படும். நமது நிகழ்காலச் செயல்களின் பயன்களும் குவிந்து கொண்டே வரும். அவை 'கிரயமாணம்' எனப்படும். இதனாலேயே நமது சொந்தச் செயல்களின் பயன்களைப் பெறுதற் பொருட்டு நாம் மாறி மாறிப் பிறவியை எய்துகிறோம்.

ஒரு குழந்தை குருடாகப் பிறக்கிறது. அக்குருட்டுத் தன்மைக்கு ஜட சம்பந்தமான காரணம் உண்டென்பது உறுதி. ஆனால் கண்ணில்லாமல் அவன் படும் மனவேதனைக்கு அவனுடைய முற்பிறவிகளில் ஒன்றில் செய்த ஏதாவது ஒரு குறிப்பிட்ட தவறான செயலே காரணமாக வேண்டும் என இந்துமத சாஸ்திரங்கள் கூறுகின்றன. கூடிய அளவு மிக முயன்றும், நமது முயற்சிகளில் ஏதேனும் ஒன்றில் நாம் தோல்வி அடைவோமாயின் நமது விதியை பழிப்பது நம் பொது வழக்கம். சற்றும் முயலாத போதும் எதிர்பாராத வெற்றியை நாம் அடைவோமாயின், நாம் மகிழ்ச்சியோடு நமது நல்ல ஊழையே புகழ்கிறோம். எனினும் காணப்படாத இது (அதிருஷ்டம்) நம் பண்டைய வினைகளின் பயனேயன்றி — நமக்குரிமையான கர்மங்களின்பலனேயன்றி-வேறில்லை. அதனை நாம் வையவோ வாழ்த்தவோ வேண்டாம். முற்பிறவிகளில் நாமே செய்த கர்மங்களின் பயனாக விளையும் இன்ப துன்பங்களை நம்மால் விலக்க இயலாது. அவற்றைப் படைத்தவர் நாமே.

சுருங்கக்கூறின், நம் ஆசைகள் (கர்மம்) கர்மத்தை உண்டாக்குகின்றன; கர்மம் அதன் பலனை இன்பமாகவோ துன்பமாகவோ உண்டாக்குகிறது; நமது கர்மத்தின் பயன்களை நுகரும் பொருட்டு ஒன்றன்பின் ஒன்றாகப் பிறவிகளை எடுக்க வேண்டியதாகிறது. கிட்டத்தட்ட ஓயாததாகிய இப்பிறப்பு - இறப்பு வட்டத்தின் வழியாக ஆசைகள் நம்மைச் சுழல வைக்கின்றன: இவ்வட்டமே ஸம்ஸாரம் எனப்படுகிறது. ★

---

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

திருச்சன்னதியில் கானோபத்திரை பண்டரிநாதனை உருக்கமுடன் போற்றி வணங்கி "ஐயனே! என் மனத்தில் இருப்பது உங்களுக்குத் தெரியாதா? உம்மையன்றி வேறு எவரையும் நான் மணாளனாக ஒரு போதும் எண்ணியதில்லையே! என்னை, வேறொருவன் எடுத்துச் செல்வதா ? அதை நீர் அனுமதிக்கலாமா? வேந்தன் அனுப்பிய வீரர்களிடமிருந்து எப்படித் தப்புவது என்பதறியாது தவித்துநிற்கும் என்னைக் காப்பாற்ற வேண்டியது உமது பொறுப்பே. அல்லவா!" என்று கண்ணீர்விட்டுப் புலம்பினாள் அந்தப்பேதை.

நம்பினோர் கெடுவதில்லை அல்லவா? பாண்டுரங்கன் அருள்புரியத் திருவுள்ளம் கொண்டான். 'பளிச்' என்று ஒரு மின்னல் ஒளிவீசியது. கானோபத்திரை அடியற்ற மரம்போல் வீழ்ந்தாள்; பாண்டுரங்கனுடன் இரண்டறக் கலந்துவிட்டாள்!

அங்கிருந்த அர்ச்சகர்கள் அதைச் கண்டு ஆச்சரியமடைந்தனர். ஆனால் அரசனது கோபத்திற்கு ஆளாக நேரிடுமே என்று அஞ்சினர். உடனே எவருக்கும் தெரியாமல் பிராகாரத்திலேயே அந்தப் பக்தையின் உடலை புதைத்து விட்டனர். மற்றுமோர் ஆச்சரியம்! அவ்விடத்தில் பசுமை நிறைந்தமரம் ஒன்று பூத்துக்குலுங்கி நின்றது!

வீரர்கள் நெடுநேரம் வெளியே காத்திருந்தனர். கானோபத்திரை கோயிலிலிருந்து வரவில்லை. கோயிலுள் நுழைந்து அர்ச்சகர்களைக் கேட்டனர். நடந்ததை அப்படியே அவர்கள் சொன்னார்கள். அரசனின் வீரர்கள் அதை நம்பவில்லை. அர்ச்சகர்களை அரசனிடம் அழைத்துச் சென்றனர்.

அரசனும் அவர்கள் கூறியதை நம்பவில்லை. ஆனால், அர்ச்சகர்கள் தாங்கள் கூறுவதே உண்மை என்று ஆணையிட்டுச் சொன்னார்கள். கானோபத்திரை பண்டரிபுரத்திற்கு வந்ததிலிருந்து அவள் கதை முழுவதையும் சொல்லிவிட்டு பாண்டுரங்கசுவாமி பிரசாதம் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த பிரசாதத்தில் நீண்ட உரோமம் ஒன்று இருப்பதைக் கண்டான்அரசன். அவனுக்கு எதுவுமே விளங்கவில்லை.

எனவே, அனைவருடனும் அரசன் பண்டரிபுரம் வந்தான். திருச்சுற்றில் உள்ள மரம் புதியது என்பது ருசுவாயிற்று. கலங்கிய மனத்துடன் பான்டுரங்கனின் சன்னதிக்குச் சென்றபோது, பக்தர்களின் பேரருளாளன் சிகையுடன் தரிசனம் தந்தான்! அரசனுக்குத் தான் செய்த தவறு தெரிந்தது; மிக்க வருந்தினான். மன்னனும் மரமாகி நின்ற மங்கைத் தெய்வத்திடம் தன் மனமாசு அகல மன்னிப்புக்கோரி, அன்றிலிருந்து மாதவத்தோர் அனைவருக்கும் மனமுவந்து தொண்டாற்றி மகிழ்ந்தான்.

✿

டிசம்பர் மாதத் தொடர்ச்சி

# ஸ்ரீ தியாகராஜரின் அத்வைதம்

நீவு லேக யே தநுவுலு நிரதமுகா
நடுசுனு
நீவு லேக யேதருவுலு நிக்கமுகா
மொலுசு
நீவுலேக ஏ வாநலு நித்யமுகா
குருசுனு
நீவுலேக த்யாகராஜு நீரூணமுல
நெடு பாடுனு''

என்று எல்லாம் நீதான். நீ இல்லை என்றால் இவ்வுலகமே இல்லை என்பதை தியாகராஜர் வலியுறுத்திக்கூறுகிறார். ராமன் ஞானஸ்வரூபன் ''ஞானஸ்வரூப ராமசந்த்ர'' என்று கூறி,

एकीभूतः प्रज्ञानघनः एवानंदमयो हृदयानंद-भुक् चेतोमुखः प्राज्ञाः" सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म"

போன்ற வாக்யங்களின் ஸாரத்தை விளக்குகிறார்.

ஐதரேயோபநிஷத்தில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது :-

" एष ब्रह्मैष इंद्र एष प्रजापतिः एते सर्वे देवाः इमानि च पंच महाभूतानि पृथिवी वायुराकाश आपो ज्योतींषीत्येतानीमानि च क्षुद्रमिश्राणीव । बीजानीतराणि चेतराणि चांडजानि च जारुजानि च स्वेदजानि चोद्भिजानि चाश्वा गावः पुरुषा हस्तिनो यत्किञ्चेदं प्राणि जंगमञ्च पतत्रि च यच्च स्थावरं सर्वं तत्प्रज्ञानेत्रं प्रज्ञाने प्रतिष्ठितं प्रज्ञानेत्रो लोकः प्रज्ञा प्रतिष्ठा प्रज्ञानं ब्रह्म ॥३॥

''ஸ்தாவர ஜங்கம ரூப'' என்று ஒரு கிருதியின் வாக்யத்தால்

" अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।
अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ॥
अहमादिश्च मध्यञ्च भूतानामन्त एव च ।

என்ற கீதாவாக்யத்தின் ஸாரத்தையும்,

यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति । यत्प्रयन्त्यभिसंविशन्ति"

என்ற தைத்திரீயோபநிஷத் வாக்யத்தின் ஸாரத்தையும் உள்ளடக்கிக் கூறியுள்ளார். ''பஞ்சபூதமுலகு நாதுடா'' என்று ஸ்வாமிகள் பரமேச்வரனின் ஸ்வரூபத்தை ராமனிடம் கூறுகிறார். ''அநந்த நாம ரூபரஹித ஞான வைராக்ய பக்தி தான மொஸகுவாட வீவு, ஆகம நிகமாதீத'' என்று பாடுகிறார். (ஹுசேனி) இந்த இடத்தில் ''பஞ்ச பூத நாதன்'' என்று விசேஷமாகச் சொல்லுகிறார். ஸ்வாமிகள் அத்வைதத்தில் எவ்வளவு பற்றுள்ளவர் என்பது தெரிய வருகிறது. இந்தக் கருத்தை உபநிஷத்துக்களிலும், கீதை முதலியவைகளிலும் பார்க்கலாம்.

" अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ
दिशः श्रोत्रे वाग् विवृताश्च वेदाः ।
वायुः प्राणो हृदयं विश्वमस्य
पद्भ्यां पृथिवी ह्येष सर्वभूतान्तरात्मा ॥

என்ற முண்டகோபநிஷத் கூறுகிறது.

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥

என்று கீதாசிரியன் கூறுகிறார்:

''எந்தெந்து ஜூசின நெந்தெந்து
பலிகின
நெந்தெந்து ஸேவிஞ்சின நெந்தந்து
பூஜிஞ்சின
அந்தந்து நீவனி தோசேடெந்துகு''

எங்கெங்கு பார்த்தாலும், எப்புறம் பேசினாலும், எங்கெங்கே பூஜை செய்தாலும், அங்கங்கே உன்னையே காண்கிறேன் என்கிறார் ஸ்ரீஸ்வாமிகள். மேலே சொன்ன வாக்யங்களில் உபநிஷத்துக்களின் ஸாரத்தை கூறியிருக்கிறார்.

"तिलेषु तैलं दधिनीव सर्पिः आपः स्रोतस्स्ववरणीषु चाग्निः"

எவ்விதம் எள்ளில் எண்ணெய் இருக்கிறதோ, எவ்விதம் தயிரில் நெய் இருக்கிறதோ. அரணிக்கட்டையில் எவ்விதம் அக்னி இருக்கிறதோ. அவ்விதம் பகவான் எல்லாவற்றிலும் மறைந்திருக்கிறான். மேலும் ஈச்வரன் ப்ரளய காலத்தில் விச்வரூபம் எடுத்து ப்ரபஞ்சத்தை அழிக்கிறான் என்று கூறுகிறது. அப்பொழுது அவனுடைய உருவத்தை வேதம் வர்ணிக்கிறது. "सहस्रशीर्षा पुरुषः सहस्राक्षः सहस्रपात्" என்று புருஷஸூக்தம் கூறுகிறது. இந்தக் கருத்தையே கீதை வர்ணிக்கிறது.

" सर्वतः पाणिपादं तत् सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥

இந்த அபிப்ராயத்தை ச்வேதாச்வதரோபநிஷத்தில் பார்க்கலாம்,

" अनन्तश्चात्मा विश्वरूपो ह्यकर्ता " " अनादिमत्त्वं विभुत्वेन वर्तसे "

என்று. ''ராம - ராம நீ'' என்ற ஆனந்த பைரவி கிருதியில், ஆத்யந்தரஹித, வேதவேத்ய, பவவைத்ய,


புலவர். டி. நித்யகல்யாணி,
நாகை.


ஸுப்ரஸன்ன, ஸத்யரூப, ஸுகுண, அப்ரமேய, என்ற பதங்களினால் ஸ்வாமிகள் தன் அத்வைத ஞானத்தை வெளிப்படுத்தியுள்ளார். ப்ரச்னோப நிஷத்திலும்,

" सत्यमेव जयति नानृतं, सत्येन पन्था विततो
देवयानः ।
येनाक्रमन्त्यृषयो ह्याप्तकामा तत्रतत् सत्यस्य
परमं निधानम् ॥

என்று கூறப்படுகிறது. ஸ்வாமிகள் ராமனின் பரதத்வத்தை விளக்குவதற்காக ஒரு கிருதியைச் செய்திருக்கிறார்.

தர்பார் — திரிபுட

எந்தும்டி வெடலிதிவோ
ஏ வூரோ நேதெலிய, இபுடைன
தெலுபவய்ய
அந்த சந்தமு வேரை நுத லெல்ல
த்ரிகு
ஞதிதைமை யுந்நதே கானி ஸ்ரீராம,
சிடுகம்டே நபராத சயமுல தகிலிாசே
சிவலோகமு காது.




# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி

## 1) தரிசனம் மற்றும் சேவைகள் :

**காலை**

| | | | | |
|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | 5-00 | முதல் | 5-30 | வரை |
| விஸ்வரூப ஸர்வதரிசனம் | 5-30 | ,, | 7-00 | ,, |
| தோமாலசேவை (ஆர்ஜிதம்) நபர் ஒருவர்க்கு ரூ. 4/- | 7-30 | ,, | 8-00 | ,, |
| அர்ச்சனை (ஆர்ஜிதம்) நபர் ஒருவர்க்கு ரூ. 4/- | 8-00 | ,, | 8-30 | ,, |
| ஸர்வதரிசனம் | 9-00 | ,, | 12-30 | ,, |
| **மாலை** | 1-00 | ,, | 6-00 | ,, |
| | 7-00 | ,, | 8-45 | ,, |
| ஏகாந்த சேவை இரவு | 9-00 | ——— | | |

(வெள்ளிக் கிழமை, ஏகாதசி, உத்திர நட்சத்திரம் மற்றும் பண்டிகை நாட்களில் விஸ்வரூப ஸர்வ தரிசனம் காலை 6-30க்கு முடிந்துவிடும். (காலை 5-30 முதல் 6-30 வரை)

## 2) ஆர்ஜித வாகனங்கள் :

| | | | ரூ. காசு |
|---|---|---|---|
| 1) | கருடவாகனம் | — | 32-00 |
| 2) | சந்திரப்பிரபை வாகனம் | — | 32-00 |
| 3) | யானைவாகனம் | — | 32-00 |
| 4) | குதிரைவாகனம் | — | 32-00 |
| 5) | சிம்ம வாகனம் | — | 32-00 |
| 6) | ஹம்ஸவாகனம் | — | 32-00 |
| 7) | சிறிய சேஷவாகனம் | — | 32-00 |
| 8) | பெரிய சேஷவாகனம் | — | 62-00 |
| 9) | சூர்யப்பிரபைவாகனம் | — | 62-00 |

## 3) ஆர்ஜித செருபு :

| | | | | ரூ. காசு |
|---|---|---|---|---|
| 1) | தோசை படி | (¼ சோலா) | — | 35-00 |
| 1) | தத்யோதனம் | (¼ சோலா) | — | 40-00 |
| 3) | புளியோதரை | ,, | — | 50-00 |
| 4) | பொங்கல் | ,, | — | 55-00 |
| 5) | சர்க்கரைப்பொங்கல் | ,, | — | 65-00 |
| 6) | சர்க்கரைபாத் | ,, | — | 85-00 |
| 7) | கேஸரிபாத் | ,, | | 90-00 |
| 8) | வீரா | ,, | — | 155-00 |

வடு ரூபுடை பலிநீ வஞ்சிஞ்சின
வைகுண்டமு காது யணசு வானி
விட வசனமு லாடி சிரமு த்ரும்ப
பட்ட விதி லோகமுகாது.
திடவு, தர்மமு ஸத்யமு ம்ருது
பாஷலு கலுகு திவ்ய ரூப!
த்யாகராஜ விநுத! நீ

"எங்கிருந்து வந்தாயோ? எந்த ஊரோ? தெரியவில்லையே! நீ செய்யும் கார்யமெல்லாம் திரிகுணாதீதமாக இருக்கிறதே! அதிககோபக்காரரான சிவனுடைய கைலாஸமா? அல்லது வாமன பிரம்மசாரி ரூபமெடுத்து பலியை வஞ்சித்து, அவனுடைய அகந்தையை அழித்த விஷ்ணுவின் வைகுண்டமா? அல்லது பொய் சொல்லித் தன் தலையைப்பறி கொடுத்த நான்முகனின் ஸத்ய லோகமா? ஆனால் உன்னிடம் த்ருடம், தர்மம், ஸத்யம், ம்ருதவானமொழி இவைகளையுடையவனாக இருக்கிறாயே! நீயார்" என்று. இந்தக் கருத்தையே மற்றொரு கிருதியில் கூறுகிறார்.

கல்யாணி — ஆதி. 2 களை.

ஏ தாவுனரா நிலகட நீகு
எஞ்சி ஜூட நகபடவு...
ஸீதா கௌரி வாகீஸ்வரி யனு
ஸ்ரீ ரூபமுலதா கோவிந்த
பூ கமலார்காநில நபமந்தா
லோக கோடுலந்தா
ஸ்ரீகருடகு த்யாககராரர்சித
ஸிவ மாதவ ப்ரஹ்மாதுல யந்தா.

"ஹே! ராம நீ எங்கு வாஸம் செய்கிறாய், எங்கே உன்னை தேடுவேன், எங்கு தேடினால் கிடைப்பாய். ஸீதை, கௌரீ, ஸரஸ்வதி என்ற மூன்று சக்தி ஸ்வரூபங்களில் உன்னைக் காணலாமா? அல்லது பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களில் காணக் கிடைப்பாயா. அல்லது சிவன், விஷ்ணு, ப்ரம்மா முதலானவர்களின் உருவத்திலா? அல்லது ஈரேழு பதினான்கு உலகத்திலா!" இந்த விஷயத்தைத் தெளிவாக மற்றொரு கிருதியில் கூறுகிறார்.

கருடத்வனி — ரூபகம்

தத்வமெறுக தாமா பர
தத்வமஸி யனே வாக்யார்த்தமு
ராம நீவனு பர

என்று. தத்வமஸி என்ற வேத வாக்யத்தின் கருத்து நீயே என்ற மேலான உண்மையை அறிவது எளிதா?

ஆகையால் ராமன் பரப்ரஹ்ம ஸ்வரூபம் என்பதில் சந்தேகமில்லே. ராமன் ஸர்வ ஸ்வரூபன் என்பதை பலகிருதிகள் மூலமாகப்பார்த்தோம். உலகில் இருக்கும் எல்லா வஸ்துக்களும் ஈச்வரனின் ஸ்வரூபமே. மற்றவை யெல்லாம் மாயை. "**मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरम्**" ஸ்ரீஸ்வாமிகள் "கன்ன தல்லி" என்ற காவேரி ராக கிருதியில்,

''தனிக ஸம்பாஷணமு நேநொல்ல
மாயலனி
தெலிஸி ரஜ்ஜுவை உரக புத்தி
செந்தனேயநம்ம''
மரு மரீசிகலனு ஜூசி நீரனி ப்ரமஸி'

என்றும் கூறுகிறுர். ஸ்வாமிகள் தன் வாழ்க்கையில் மோஹத்தை விரும்பினுர் என்பதை முகாரி கிருதியில் காணலாம்.

''எந்தனி நே வர்ணிந்துனு சபரீ
பாக்யமு''
இனகுலபதி ஸமுகம்புன புனரா
வ்ருத்தி ரஹிதபத முனு பொந்தின''

என்று. ''இனகுலபதி ஸமுகம்புன'' என்ற வாக்யத்தால்

"**मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।**
**नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ।।**
**अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।।**"

என்றகீதையின் கருத்தைவலியுறுத்துகிறுர். சிலர் ஸ்வாமிகள் பாடிய ''த்வைதமு ஸுகமா? அத்வைதமு ஸுகமா? என்ற கீர்த்தனையை வைத்துக் கொண்டு வெறும் பஜனைசெய்யும் பாகவதர் என்று கூறுகிறுர்கள், ஆனுல் த்வைதம், அத்வைதம் என்ற பிரிவுகளால் சண்டை, சச்சரவுகள் வேண்டாம். ஸ்ரீராமன் ஒருவனே பரதத்வம் என்பதை உணர்த்துவதற்காகவே அவ்விதம் பாடினுர். அவர் முற்றிய சாஸ்த்ரஞானி.

பலஹம்ஸ ஆதி

''ராம ஸீதா ராம ராம'' என்ற கிருதியின் சரணத்தில்,

அத்வைத ஸாம்ராஜ்யமுனு அப்பிநட்டு
ராம
ஸத்வை ராக்யமு நிதியு ஸாயுஜ்யமே
ராம
ஆகம நிகமமுலகு அர்த்தமிதி ராம''

அத்வைத ஸாம்ராஜ்யம் கிடைத்தது போல், ஸத் வைராக்யம் என்பது நிதி—அதுவே ஸாயுஜ்யமாகும் என்று. மேலும் ''எந்துகு பெத்தலவலே புத்தி ஈயவு'' என்று கிருதியின் சரணத்தில்,

''வேத சாஸ்த்ர தத்வார்த்தமு
தெலிஸி
பேத ரஹித வேதாந்தமு தெலிஸி
நாத வித்ய மர்மம்புலனு தெலிஸி.

என்று கூறுகிறுர். இங்கே 'பேதரஹித வேதாந்தமு' என்று கூறுவதால் அத்வைதத்தையே குறிப்பிடுகிறுர். நிற்க ''மனஸு ஸ்வாதீனமைன'' என்ற சங்கராபரணராக கிருதியில்,

''மனஸு ஸ்வாதீன மைனயா கனுநிகி
மரி மந்த்ர தந்த்ரமு லேல

தநுவு தானு காதநி யெஞ்சுவாரிகி
தபஸு ஸேய நேல தசரத பால!

அந்நி நீவநுசு யெஞ்சு வாநிகி
யாச்ரம பேதமு லேல

கந்து கட்டு மாயலநி யெஞ்சுவாநிகி
காந்தல ப்ரம லேல தசரதபால
ஆஜன்மமு துர்விஷய ரஹிதுனிகி
கதாகத மிகயேல.

என்று மனஸைக் கட்டுப்படுத்தியவனுக்கு மந்த்ரம், தந்தரம் முதலியவை எதற்கு?

தன் உடல் முதலியவை தனதில்லை என்பவனுக்கு தவம் முதலானவை எதற்கு ?

எல்லாமே நீயே என்றிருக்கிறவனுக்கு ஆச்ரமபேதம் எதற்கு.

கண்களுக்கு தெரிவதெல்லாம் மாயை என்றிருக்கும்போது தன் மனைவி மக்களிடம் ஆசை எதற்கு.

பிறவியிலிருந்தே நற்குணம் படைத்தவனுக்கு ஜனன, மரணபயம் எதற்கு? ஆகையால் அத்வைத தத்வங்களை ஸ்வாமிகள் பலவிதமாகக் கூறுகிறுர்.

"**बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते**"

என்ற கீதையின் ஸாரத்தை ''ஸ்வர ராக ஸுதா'' என்ற கிருதியின் சரணத்தில் "பஹு ஜந்மமுலகு பைனி க்ஞானியை பரகுட மோக்ஷமுரா'' என்று கூறுகிறுர்: அதாவது அநேக ஜன்மாக்கள் எடுத்து க்ஞானவானுக ஆகி கடைசியில் மோக்ஷத்தை அடைகிருன் என்பதாகும். மேலும் தெளிவாக அத்வைத கருத்தை பாமரஜனங்களுக்குப் புரியும்படி ''பக்துனி சாரித்ரமு'' என்ற பியாகடை ராக கிருதியில்,

"ஸிவ மாதவ பேதமு சேயகராது' என்று கூறியிருக்கிறுர். மேலும் தைத்திரீய உபநிஷத்தில் முதல் வல்லியில் ஆருவது அனுவாகத்தில், கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"**सुवरित्यादित्ये । मह इति ब्रह्मणि । आप्नोति स्वाराज्यम्। आप्नोति मनसस्पतिम् । वाक्पतिश्चक्षुष्पतिः । श्रोत्रपतिः विज्ञानपतिः । एतत्ततो भवति । आकाशशरीरं ब्रह्म । सत्यात्म प्राणारामं मन आनन्दम् । शान्तिसमृद्धममृतम् । इति प्राचीनयोग्य उपास्व ।। २ ।।**

இந்த உபநிஷத் ஸாரத்தை "ஸீதா வர! ஸங்கீத க்ஞானமு'' என்ற தேவகாந்தாரி க்ருதியில் ''ஆகாச சரீரமு ப்ரஹ்மமனே ஆத்மா ராமுனி தாஸரி ஜுசுசு'' ''கீதார்த்யகில உப நிஷத் ஸார பூத'' என்றும் கூறுகிறுர். ஸ்ரீராமன் பர தத்வஸ்வரூபன் என்பதற்கு ''நித்யரூப எவரி பாண்டித்யமு'' என்ற கிருதியில் ''ஸத்ய மைன ஆக்ஞ மீர ஸாமர்த்யமு கலதா'' என்று. உன்னுடைய கட்டளை இல்லாமல் எதுவும் நடைபெருது என்ற இக்கருத்தை தைத்திரீய உபநிஷத்தில் பார்க்கலாம்.

"**भीषास्माद्वातः पवते । भीषोदेति सूर्यः । भीषास्मात् अग्निश्चेन्द्रश्च । मृत्युर्धावति पञ्चमः**"

ஸ்வாமிகள் தன் அத்வைத ஞானத்தை பல கிருதிகளில் கூறுகிறுர். "ஏதாரி ஸஞ்சரிந்துரா'' என்ற காந்தமணி ராக கிருதியில் "ஆதிமத்யாந்த ரஹித'' என்று பரதத்வத்தைக் கூறி விட்டு. "அன்னி தானனுமார் கமுனனு ஜனிதே, நன்னு விடனு பாரமனி யனேவு' என்று கூறுகிறுர் எல்லாம் நீயே என்று கூறினுல் என்னை நீ ஒரு பாரமாகக் கருதுவாய், ''தன்னு தாஸ வரதாயண்டே த்வைதுடனு'' என்று நீ அடியார்களை காப்பாற்றுகிறவன் என்றுசொன்னுல் நீ வேறு நான்வேறு என்ற எண்ணம் உண்டாகிவிடுகிறது. ஆகையால் எந்த வழியைப் பின்பற்றுவது என்று கூறி முடிவில் பக்தி என்பதெல்லாம் ஞானத்திற்கு அடிப்படையே என்று கூறுகிறுர். இந்தக் கருத்தை,

'' அனுராகமு லேனி மனஸுன
ஸுக்ஞானமு ராது
கனுலேன அந்தர் க்ஞானுலகே கானி
வக வககா புஜியஞ்சேவாரிகி
த்ருப்தியென ரீதி
ஸகுண த்யானமுபைனி ஸெளக்யமு
த்யாகராஜநுத

(அடுத்தப் பக்கம் பார்க்க)

# நான்கு தர்மங்கள்



தென்னாறு ஜி. இராமநாதன், பி.ஏ.

உலகில் நான்கு நான்கு என்று தர்மங்கள் மனித வாழ்க்கையில் இடம் பெறுகின்றன. இந்த நான்கு என்பதற்குப்பலவகையிலும்முக்கியத் துவம் வாய்ந்த கருத்துக்கள் உலக தர்மத்தில் உள்ளடங்கியுள்ளன.

மனித வாழ்வில் ''நாலும் தெரிந் தவன் ஞானி''என்போர் பெரியோர். அவையாவன :

**வேதம் நான்கு :** ருக், யஜுர், சாம, அதர்வணம்.

**யோகம் நான்கு :** இராஜயோகம், பக்தி யோகம், கர்ம யோகம், ஞானயோகம்.

**மார்க்கம் நான்கு :** தசாமார்க்கம், சற்புத்திரமார்க்கம், யோக மார்க்கம், சன்மார்க்கம்.

**ஆசிரம தருமங்கள் நான்கு :** பிரமச் சரியம், கிருகஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம்,

**வருணம் நான்கு :** பிராமணர், க்ஷத்ரி யர், வைசியர், சூத்திரர்.

**விளக்கம் :—**

## வேதம்

1) **இருக்கு வேதம் :** இது தேவர் களைப் பற்றிய விளக்கம் கொண்டது. ''பிரக்ஞானம் பிரம்மம்'' அதாவது உள்விழிப்பே பிரம்மம் என்கிறது.

2) **யஜுர் வேதம் :** வேள்வி நடத்துவது பற்றிய கருத்துக்கள் கொண்டது. இது ''அகம்பிரம்மாஸ்மி என்கிறது. நான் பிரம்மம். நான் என்பது ஆத்மாவே.

3) **சாம வேதம் :** வேதம் பற்றிய விளக்கம் கொண்டது. இது ''தத்வ மசி'' என்கிறது. நான் பிரம்மம் ஆனால் என் எதிரில் நிற்கும் நீயும் அதுவே.

4) **அதர்வண வேதம் ;** மந்திர விளக்கங்களை உள்ளடக்கியது. இது ''அயம் ஆத்மா பிரம்மம்'' இந்த ஆத்மாவே பிரம்மம் என்கிறது.

## யோகம்

1) **இராஜ யோகம் :** இது இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டு வழிகளாலே மனத்தை யடக்கி பிரம்மத்துடன் ஒன்றுதல்.

2) **கர்ம யோகம் :** கடமையை கடவுள் வழிபாடாக செய்வது, செய்யும் தொழிலே தெய்வம் என்ற முறையில் பற்றற்று கடமையாற்று வது.

3) **பக்தியோகம் :** இறைவனிடம் அன்பு பூண்டு, அவனிடம் தஞ்ச மடைந்து சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச் சனம், வந்தனம், தாஸ்யம், சக்யம், ஆத்ம நிவேதனம் போன்ற ஒன்பது வித பக்தி மார்க்கங்களை கடை பிடித்து ஒழுகுவது.

4) **ஞான யோகம் :** தியானத்தாலே மனஅலைகளை ஒடுக்கி, மனந்தெளிந்து தன் உண்மை சொரூபத்தை அறிந்து அதுவாகவே இருப்பது.

## ஆசிரம தருமங்கள்

1) **பிரம்மச்சரியம் :** குருவினிடம் கல்வி பயின்று அறிவினை வளர்க்கும் பருவத்தில் (இளமையில்) பிரமச்சரி யம் காத்தல்.

2) **கிருகஸ்தம் :** கல்வி கற்ற பின் மணம் முடித்து இல்லற தர்மங்களை அனுசரித்து நன்மக்களைப் பெற்று வாழும் நிலை கிருஹஸ்தம்.

3) **வானப் பிரஸ்தம் :** வளர்ந்த பிள்ளைகள் பொறுப்பேற்கும் தருவா யில் வீட்டுப் பொறுப்பை தம் மக்க ளிடம் ஒப்படைத்து விட்டு ஆசிரமங் களிலோ, வனங்களிலோ தம் மனைவி யுடன் பிரமச்சரியம் காத்து வாழும் நிலை.

4) **சந்நியாசம் :** முடிவாக மேற் கண்ட எல்லா வற்றையும் துறந்து மனத்தையடக்கிஉள்முகமாகநோக்கி உண்மைப் பேரானந்தம் அடைந்து உடலை நீக்கி கடவுளுடன் ஐக்கிய மாதல்.

## வருணம் நான்கு

**பிராமணர் :** இவர்கள் பிராம் மணத்தை உணர்ந்து அறநெறி தவறாது வாழ்ந்து வேதம் ஓதுதல்.

**க்ஷத்திரியர் :** இவர்கள் அரச பரம் பரையினர். இவர்கள் கடமை நாட் டைக் காத்தல் போர் செய்தல்.

**வைசியர் :** இவர்கள் தொழில் வியாபாரம். மக்களுக்குத் தேவை யான பொருள்களை பல இடங்களில் இருந்து தருவித்து விற்பனை செய்தல்.

**சூத்ரர் :** இவர்கள் பிராம்மணர், க்ஷத்ரியர், வைசியர் ஆகிய மூவருக் கும் தேவையான வேலையைச் செய் பவர்கள்.

வேதங்கள் நான்கும் உலக க்ஷேமத் துக்குரிய வழியையும்,

நான்கு வருணத்தவர்கள் உலக நடைமுறை வாழ்க்கைக்கும்,

யோகம் நான்கும், வர்ணுசிரமத்- தருமங்கள் நான்கும் தனி மனிதர் ஒவ்வொருவரும் தனது வாழ்க்கை யில் கடைபிடித்து பரஞானம் அடைய வழிகாட்டும் உலக தர்மங் களாக விளங்குகின்றன.

ஒவ்வொரு தனிமனிதரும் தனது நிலைமைக்கு ஏற்ப நான்கு தர்மங் களையும் கடைபிடித்து நற்கதி பெற லாம்.



---

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

என்ற வரிகளால் பாடுகின்றார். அனு ராகம் என்றால் பக்தி என்று பொரு ளாகும். நல்ல பக்தியில்லையேல் நல்ல ஞானம்ஏற்படாது. ஸூக்ஞானம்என் பது நல்ல தத்வக் ஞானம். அது ப்ரம் மக்ஞானம் பெற்றவர்களுக்கே கை கூடும். பலவித ருசிப் பொருள்களைச் சாப்பிடுபவனுக்கு எந்த வஸ்துவிலி லும் ருசி இருக்காது. அத்தோடு அல்லாமல் பசியும்திராது, ஆகை யால் முதலில்ஸகுணத்யானம்செய்து பிறகு நிற்குணப்ரம்மத்தை அடைய வேண்டும். இதுவே ஸ்ரீதியாகராஜரின் கீர்த்தனைகளின் கருத்தாகும். ★

# தோடு உடைய செவியன்

தோடுடைய செவியன் விடையேறி
யோர் தூவெண் மதி சூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசிஎன்
உள்ளங் கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனை நாட்பணிந்
தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான்
இவனன்றே.

சீர்காழிப்பதியிலே மூவாண்டு நிரம்பிய ஆளுடைப் பிள்ளைக்கு எம் பிராட்டி ஞானப்பால் கொடுக்க, ஞானத்தோடு சம்பந்தப்பட்டு ஞான சம்பந்தராக ஆகி திருவாய் மலர்ந்தருளிய முதல் பாடல் இது. தமிழ் வேதமாகிய திருமுறைகளுக்கு பிள்ளையார் சுழியாக உள்ளது.

வடமொழி வேதம் 'ஓம்' என்ற பிரணவத்தோடு தொடங்குகிறது. தமிழ் மொழி வேதம் 'த' கரமெய்யின் மேலே 'ஓ' கார உயிறேறி ''தோ...'' என்று ஆரம்பிக்கிறது, ''தோடு உடைய செவியன்.''

பெண்களுக்கு உரியது தோடு. ஆண்களுக்கு உரியது கடுக்கன். சம்பந்தர் மரபு தெரிந்து பாடுகின்றார். குண்டலமணிந்த செவியன் என்று சொல்லாமல், தோடுடைய செவியன் என்கிறார். காரணம், சுவாமி அர்த்த நாரியாகக் காட்சி கொடுக்கிறாரல்லவா? இடப்பக்கம் தோடு, வலப்பக்கம் குண்டலம். தனக்குப் பால் கொடுத்தது அம்பாள். அதனாலே அம்பாளைப் பார்த்து 'தோடு உடைய செவியன்...... என்கிறார்.

''விடையேறி'' — வ்ருஷபத்தின் மேலே சுவாமி ஆரோகணித்திருக்கிறாராம். ஏன் விருஷபத்தை வாகனமாக வைத்துக் கொண்டார்? மாடு உழைக்கிறாப் போலே வேறே எதுவும் உழைக்காது. மேலும், சிவபெருமானுக்கு உள்ள குணம் மாட்டிற்கும் இருக்கிறது. சிவபெருமான் என்ன செய்தார்? ஆல காலத்தைத் தான் உண்டு, அமுதத்தை அமரர்களுக்குக் கொடுத்தார். அடியார்களுக்குப் பொன்னும் மணியும் கொடுத்து, தான் எலும்பையும், பாம்பையும் அணிந்து கொண்டார். அவர்களுக்கு வீடும் கூடகோபுரமும் அளித்து, தான் ருத்ர பூமியில் தங்கினார். நமக்கு வேண்டியதைக் கொடுத்து, நாம் ஒதுக்குவதை அவர் எடுத்துக் கொண்டார்.

இதே போலத்தான் மாடும். வருடம் பூராவும் வயலில் உழைத்து, அறு வடையாகும் போது தானியம் நமக்கு, பதர் அதற்கு. குத்தி அரிசியாக்கினால் அரிசி நமக்கு. உமி அதற்கு. அரிசியை உலையிலே போட்டால் சோறு நமக்கு, கஞ்சி அதற்கு. சரி, சோற்றை இலையிலே போட்டால் சாப்பாடு நமக்கு, இலை அதற்கு! இம்மாதிரி பரோபகாரி மாட்டைத் தவிர வேறு எது? அதனாலேதான் சுவாமி அதை வாகனமாக வைத்துக் கொண்டார்.

''விடையேறி''. 'விடை' என்பது 'தர்மம்'. உலகமெல்லாம் அழிந்த போது தர்மம் விடையாகச் சென்று எம்பெருமானைத் தாங்கிற்றாம். உலகையே தாங்குகிறவன் சிவபெருமான். அவரையே தாங்குகிறதாம் தர்மம்.

'தூ வெண் மதி சூடி' காலிலே விழுந்தவனை, தலையிலே தூக்கி வைத்துக் கொண்டாராம் சிவபெருமான். யார் செய்வார் இது மாதிரி? முடியிலே பிறைச் சந்திரனை அணிந்திருக்கிறார் ஸ்வாமி. அது எப்படி இருக்கிறது? தாய் மார்கள் தலையிலே கொண்டைபோட்டு மல்லிகைச் சரத்தை பிறைச் சந்திரனைப் போல வளைத்து, இரண்டு நுனிகளும் கீழ் நோக்கியிருக்குமாறு அணிவார்கள்.

சிவ பெருமான் பிறைச் சந்திரனை நுனிகள் மேல் நோக்கியிருக்குமாறு அணிந்திருக்கிறாராம். இது எதைக் குறிக்கிறது?தாய் மார்கள் இந்தஉலக வாழ்க்கைக்கு உதவுகிறார்கள். அதனாலேகீழ்நோக்கிஅணிகிறார்கள்.நான் மேலுலக வாழ்வுக்கு உதவுகிறேன் அதனாலே மேல் நோக்கி அணிந்திருக்கிறேன் என்று சொல்லாமல் சொல்வதுபோல் இருக்கிறதாம்.

''காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்'' சிவ பெருமான் காசு பணம் திருட மாட்டார். உள்ளத்தைக் கொள்ளை கொள்வார். 'உள்ளம் கவர் கள்வன்'' ஸ்ரீ ருத்ரத்திலே சுவாமிக்கு 'தஸ்கராணும் பதியே நமஹ' என்று ஒரு பெயர் உண்டு. 'தஸ்கராணும்' அதாவது அபஹரிக்கின்றவர்கள்.

திருமதி. ஆர். ராஜலக்ஷ்மி
சென்னை.

அந்தத் திருடர்கள் கூட்டத்திற்குத் தலைவனே என்று வேதம் அழைக்கிறது. சுவாமி என்ன திருடுவார். ஆன்மாக்களுக்குத் தெரியாமலே ஆன்ம போதத்தை திருடுவாராம். அதனால் தான் 'உள்ளம் கவர் கள்வன்' என்று சொன்னார்.

இப்பொழுதும் உள்ளம் கவருவதற்கு பல பேர் என்ன செய்கிறார்கள்? பலவிதமான வாசனைப் பொடிகளை பூசிக் கொள்கிறார்கள். சிவனும் அதைத் தான் பண்ணுகிறாராம் ''சுடலைப் பொடி''. மயானத்திலே இருக்கிற சாம்பலைப் பூசினார் என்றார். என்ன பொருள்? சாம்பலாக ஆன

(32-ம் பக்கம் பார்க்க)

தொடர்கட்டுரை :

அத்தியாயம்-12

## பக்தி யோகம்

பகுதி — 6

# கீதை காட்டும் நல்வழி



மன ஒருமைப்பாடு இல்லாமல் உலகில் எந்தக் காரியத்திலும் வெற்றி அடைய முடியாது. சிறிய காரியமோ அல்லது பெரிய காரியமோ—எதானாலும் அதில் பூர்ணமாக மனத்தினை லயித்துச் செய்தாலன்றி குறிப்பிட்ட அளவு வெற்றி கிட்டாது. இதை சம்ஸ்கிருதத்தில் 'ஏகாக்ரதை' என்பார்கள். ஆங்கிலத்தில் இதை 'One pointedness' என்பர். Meditation, Concentration என்ற இரண்டு ஆங்கில வார்த்தைகள் ஒன்றோடொன்று தொடர்பு உடையவை ஆகும். இவை தமிழில் முறையே 'தியானம்', 'மன ஒருமைப்பாடு' எனப் பொருள்படுகின்றன. மன ஒருமைப்பாடு,செயல்களின் வெற்றிக்குத் தேவை என்றால், அந்த மன ஒருமைப்பாட்டிற்கு அடிப்படையாக தியானம் விளங்குகிறது. அலையும் மனத்தை அடக்கி நிறுத்துதல் தியானம் அல்லது Meditation ஆகும். அந்த மனத்தை ஒரு முனைப்படுத்துதல் Concentration ஆகும்.

மாணவன் தேர்வில் முதல் வகுப்பில் தேர்ச்சி அடைய வேண்டுமானால் வியாபாரி வியாபாரத்தில் நன்கு முன்னேற வேண்டுமானால், விவசாயி விவசாயத்தில் செழிக்க வேண்டுமானால்—ஏன் எவரவர் எந்தெந்தத் துறையில் ஈடுபடுகிறார்களோ அவரவர் அந்தந்தத் துறையில் சீரும் சிறப்பும் பெற்று விளங்க வேண்டுமானால் அதற்கு அடிப்படைத் தேவை'மன ஒருமைப்பாடே'யாகும். மனம் ஆற்றல்களின் நிலைக்களன். முறையாக மனத்தைப் பயிற்றுவித்தால் அது நம்மை நாம் கனவிலும் எதிர்பாராத உயர்ந்த நிலைகளுக்கு இட்டுச் செல்லும். அப்பொழுது மனம் நமது உற்ற நண்பனாக விளங்குகிறது. மாறாக மனத்தின் வழியில் நாம் போவோமானால் அது நம்மை எங்கோ அதல பாதாளத்தில் கொண்டு போய் விட்டு விடும். ஏனெனில் இயற்கையில் பொருள்களுக்குக் கீழ் நோக்கிய ஈர்ப்புச் சக்தியே அதிகம். மனம் இயற்கையாக கீழ் நோக்கி அதாவது புலனின்பங்கள் குறித்தே செல்லும் தன்மையது. அது அதனது தவறல்ல. அது அதன் சுவபாவம் அல்லது இயல்பு. ஆனால் கீழ் நோக்கிப் பாயும் மனத்தைத் தடுத்து-அதாவது அதனது திசையை மாற்றி - மேல் நோக்கி, உயர்ந்த குறிக்கோள்களை நோக்கிச் செலுத்துவது தான் யோகப் பயிற்சிகளின் அடிப்படை அம்சமாகும்.

முன்னர் குறிப்பிட்ட சுலோகத்தில் தியானத்தைப் பற்றிப் பகவான் குறிப்பிடுகிறார். அங்குமிங்கும் அலையும் மனத்தை முதலில் பகவான்பால் லயிக்கச் செய்ய வேண்டும். பிறகு அறிவு பூர்வமாக ஆராய்ந்து 'இறைவனே நமக்கு உற்ற துணை' என்று தீர்மானித்து அவனையே யாண்டும் அண்டி இருத்தல் இறைவாழ்வு ஆகிறது.

அஷ்டாங்க யோகத்தில் மன ஒருமைப்பாடும் தியானமும் முறையே ஆறுவது, ஏழாவது அங்கங்களாக தாரணை, தியானம் எனப்படுகின்றன. தாரணைப் பயிற்சியின் ஆரம்ப நிலையில் முதலில் மனம் அங்குமிங்கும் ஓடத்தான் செய்யும். பலவந்தமாக அதனுடன் சண்டையிட்டு அடக்கி நிறுத்த முயலுதல் கூடாது. அப்படிச் செய்தால் தோல்வி நமக்குத் தான். தியானப் பயிற்சியின் ஆரம்பத்தில் அதன் போக்கிலேயே நாம் போய் அதனது நடவடிக்கைகள் சாட்சியாக இருந்து கவனிக்க வேண்டும். அதை நாம் பின் தொடர்கிறோம் என்பதை அது தெரிந்து கொண்டதும்,தானாக நமது வழிக்கு அது வரும். மனத்தை சாட்சியாக இருந்து கண் காணிப்பதும் ஒரு விதப் பயிற்சியாகிறது.

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

மன ஒருமைப்பாட்டுப் பயிற்சியின் துவக்கத்தில் மெழுகுவர்த்தியின் ஜ்வாலை, பூ, அல்லது சந்திரன் போன்ற ஏதாவது ஒரு பொருளின் மீது மனத்தைப் பதிய வைக்கலாம்.

தியானத்திற்கு இந்தப் பயிற்சி பேருதவி புரியும். மன ஒருமைப்பாட்டில் முன்னேற்றம் ஏற்பட்டுவிடின் அது தியானமாக மலர்ந்துவிடும். சீரிய மன ஒருமைப்பாடே தியானம். மன ஒருமைப்பாட்டில் நமது முயற்சி தேவைப்படுகிறது. ஒரு முகப்பட்ட மனம் தைல ஒழுக்குபோல-அதாவது ஒரு பாத்திரத்திலிருந்து விடப்படும் எண்ணெ மற்ெறொன்றிற்கு இடைவெளியின்றி விழுவது போல - உயரிய தியானத்திற்கு வழிகோலுகிறது. தியானத்தில் மேலே செல்லச் செல்ல நமது முகத்தில், வாக்கில், உள்ளத்தில் ஒரு வித ஒளி உண்டாகும். சொல்லினில் ஆற்றல் கூடும். செயலில் திறமை அதிகரிக்கும். சுருக்கமாகக் கூறின் சித்திகள் பல தாமே வந்து வாய்க்கும்.

தியானத்தைப் பற்றி இந்த சுலோகத்தில் பகவான் கூறிய இந்தக் கருத்தையே அத்யாயம் 8-சுலோகம் 7 விலும், மற்றும் அத் 9-34, அத் 10-9, அத் 18-65 ஆகிய சுலோகங்களிலும் வலியுறுத்துகிறார்.

**मय्यर्पित मनोबुद्धि र्मामेवैष्यस्यसंशयः।** (8-7)

**मन्मना भव मद्भक्तो**
**मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि युक्त्वैवं**
**आत्मानं मत्परायणः ॥** (9–34)

**मच्चित्ता मद्गतप्राणा**
**बोधयन्तः परस्परम् ।**
**कथयन्तश्च मां नित्यं**
**तुष्यन्ति च रमन्ति च ॥** (10–9)

**मन्मना भव मद्भक्तो**
**मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि सत्यं ते**
**प्रतिजाने प्रियोऽसि मे ॥** (18–65)

மேலே குறிப்பிட்டுள்ள சுலோகங்கள் யாவும் திரும்பத் திரும்ப பகவான் எவ்விதம்இந்த சீரிய கருத்தை எடுத்துரைக்கிறார் என்பதை விளக்குகின்றன.

'தியான யோகத்தை அதாவது உள்ளத்தை உறுதியாக இறைவன்பால் வைக்க என்னால் இயலவில்லை. எவ்வளவு தான் நான் முயன்றும் என் மனத்தை நிலை நிறுத்த என்னால் முடியவில்லை. அப்பேர்ப்பட்ட எனக்கு உம்மை அடைய வேறு வழி கிடையாதா?', என்று பக்தர் ஒருவர் கேள்வி கேட்கலாம் என்பதைக் கருத்தில் கொண்டு பகவான் அடுத்த சுலோகத்தில் மாற்று வழியொன்றைக் குறிப்பிடுகிறார். அது அப்பியாஸயோகம் எனப்படுகிறது.

# திருவாழ் மார்பன் கீர்த்தனம்

திரு. எம். எல். பெருமாள், புதூர்.

இராகம்-மலயாம்ருதம் தாளம்-ஆதி

**பல்லவி**

திருப்பணி ஏற்கும் திருமாலவன்
திருப்பதி சாரம் வாழ் திருவாழ்மார்பன். (திருப்பணி)

**அனுபல்லவி**

அருட்பதியில் கருடாழ்வார் பணிந்தேத்தும்
அறக்கடலாய் நின்று அன்பர் குறைதீர்க்கும். (திருப்பணி)

**சரணங்கள்**

உருத்திர கணம் தொழும் உமைபங்கனொடு
உருக்கொண்டு உலகாளும் திரிமூர்த்தி
திருக்கையில் சங்குசக்கரம் தாங்கி
திருத்துழாய் தவழும் தீம்குழல் வண்ணன். (திருப்பணி)

பவித்திரம் கொண்ட அணிமகுடமும்
பவளவடமும் கவுத்து வாபர்ணமும்
அருச்சுனனுக்கு அருள் கொடுத்த கண்ணன்
அச்சுதன் அமரர் ஏத்தும் யசோதை பாலன் (திருப்பணி)

# அலர்மேல் மங்கை

நெல்லை. ஆ. கணபதி - சென்னை.

அலர்மேல் மங்கைத் தாயார் அருள்தான்
அனைவரையும் காக்கும்!
ஆயிரம் கோடி உயிர்களின் துயரம்
அனைத்தையுமே போக்கும்—திருப்பதி

மலைமேல் உறையும் திருவேங் கடத்தான்
மனதைத் தினம்ஈர்க்கும்!
மலைபோல் துயர்கள் வரினும் பனிபோல்
மறைய அருள்வார்க்கும்!—ஆய

கலைகள் வளர்க்கும்! கருணை செழிக்கும்!
களிப்பும் மிகஊட்டும்!
கடல்போல் செல்வம்! மனம்போல் வாழ்வு!
காட்டும் புகழ்நாட்டும்!—தாமரை

மலர்மேல் உறையும் லக்ஷ்மித் தாயார்
மகிமை தினம்எண்ணி—அன்பர்
மனதால் தொழுதால் அருள்வாள் தேவி!
மலரும் நம்வாழ்வு!

அத சித்தம் ஸமாதாதும்
ந சக்நோஷி மயி ஸ்திரம் !
அப்யாஸ யோகேன ததோ
மாமிச்சாப்தும் தனஞ்ஜய ‖ 9 ‖

*'தனஞ்ஜயா! சித்தத்தை என் பால் உறுதியாக வைக்க உன்னல் முடியவில்லையானல், அப்பியாஸ யோகத்தால் என்னை அடைய விருப்பம் கொள்வாயாக.'*

அப்பியாஸம் என்றல் பழக்கம் அல்லது திரும்பத் திரும்பச் செய்தல் என்று பொருள். அப்பியாஸ யோகம் என்பதை ஆங்கிலத்தில் The yoga of constant practice என்று கூறலாம். இடைவிடாத பயிற்சியினல் எத்துணை கடினமான காரியமும் எளிதாக ஆகிவிடும். மலை மீது ஏறுதல், நீர் மேல் மிதத்தல், நெருப்பின் மீது நடத்தல் போன்ற சாதாரண செயல்களுக்கே எவ்வளவு பயிற்சி தேவைப்படுகிறது? அப்படியாயின் அறிதற்கு அரிதாகிய மனத்தை அடக்குவதற்கு எவ்வளவு பயிற்சி தேவை! பயிற்சிக்கு முன்னர் 'இது நம்மால் முடியாது. இது எனக்கு இயலாது!' என்று தோன்றிய செயல்கள் யாவும் பயிற்சிக்குப் பின்னர் எவ்வளவு எளிதாகி விடுகின்றன! இது நமது அனுபவம் தானே! முயன்றல் முடியாதது என்பது ஒன்றில்லை. முயன்றல், பயின்றல் எதுவும் யாருக்கு சாத்தியப்படும். வேண்டியது யாவும் மன உறுதியும், தொடர்ந்த பயிற்சியும் பொறுமையுமேயாகும்.

சிலரது கையெழுத்தை 'தலையெழுத்து' போல இருக்கிறதே என்று கேலி செய்வர். மற்றும் சிலரது கையெழுத்துஅச்சுக் கோர்த்தது போல் அவ்வளவு அழகாக இருக்கும். ஏன் இந்த வேறுபாடு? முன்னவருக்குக் கையெழுத்துப் பயிற்சி இல்லை. பின்னவருக்கு அதில் மிகுந்த பயிற்சி இருந்திருக்க வேண்டும்.

சிலர் பேசினல்'போதும், போதும்' என்று சொல்லத் தோன்றும். மற்றும் சிலரது பேச்சைக் கேட்டுக் கொண்டே இருக்கத் தோன்றும். ஏன்? பின்னவர் பேசிப் பயின்றிருக்கிறர்.

சிறு பையன் சைக்கிள் விடுவதற்குப் பயிலுகிறன். முதலில் சில நாட்களுக்கு கையிலும் காலிலும் காயங்கள் ஏற்படுகின்றன. ஏன்? சைக்கிளில் அவன் ஏற முயலுகையில் கீழே விழுவதனல் உண்டான சிராய்ப்புகள் அவை. ஆனல் அவற்றையெல்லாம் அவன் பொருட்படுத்துவதில்லை. அவற்றையெல்லாம் அவன் விழுப்புண்களாகக் கருதுகிறன். தந்தை மிரட்டியும் தாய் கடிந்தும், அவன் சைக்கிள் கற்பதை விடத்தயாராயில்லை.விடாது பயிலுகிறன். தொடர்ந்து பயிலுகிறன். அதன் விளைவாக பிற்காலத்தில் சந்தடி மிக்க தெருவில் கூட 'ஹாண்ட் பாரை' விட்டு விட்டு வேகமாக சைக்கிளை ஓட்டும் திறமைசாலியாக அவன் மாறிவிடுகிறன்.

இவையனைத்தும் அப்பியாஸத்தின் விளைவுகள். இது தியானத்திற்கும் பொருந்தும். இடையருது மனத்தை இறைவன் பால் லயிக்கச் செய்ய இயலவில்லையாயின், படிப்படியாக அதை வழிக்குக் கொண்டு வர வேண்டும். முதலில் சில நிமிடங்கள்...... ...பின்னர் சொஞ்சம் அதிக நேரம்..........இவ்விதம் படிப்படியாக மனத்தைப் புறப் பொருள்களிலிருந்து நீக்கி இறைவன் பால் லயிக்கச் செய்ய வேண்டும். இதில் நாம் மனத்தளர்ச்சி அடையக் கூடாது. மனம் நம்மைப் பலவிதங்களில் ஏமாற்றப் பார்க்கும். அதற்கு நாம் மசிந்து விடக் கூடாது.

நாள் முழுவதும் முடியவில்லையாயின் குறைந்த பட்சம் காலை எழுந்தவுடன், இரவு படுக்கப் போகும் முன்னர், ஸ்நானத்திற்குப் பின்னர், உணவு உண்பதற்கு முன்னர், என்று இந்த வேளைகளில் ஒரு சில நிமிடங்கள் கண்களை மூடி தியானம் பயிலலாம். தியானத்தின் பொழுது ஏற்படும் தொல்லைகளைப் பற்றியும் அவற்றை எப்படிச் சமாளித்து வெற்றி காண்பது என்பது பற்றியும் குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் தமது 'Concentration and Meditation' என்ற நூலில் மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறர்.

'நான் பஞ்ச கோசங்கள் அல்ல, நான் உடல் அல்ல, மனம் அல்ல, புத்தி அல்ல........ இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்கும் ஆத்ம சொரூபம் நான்', என்று திரும்பத் திரும்ப எண்ணி அந்த எண்ணத்தில் மனத்தை லயித்திருக்கச் செய்தலும் அப்பியாஸ யோகமாகும். 'முதலில் சில முறை முயன்று விட்டு என்னல் முடியவில்லை என்று விட்டு விடவேண்டாம். திரும்பத் திரும்ப முயன்றல் வெற்றி கிட்டும்' என்று நம்மை ஈண்டு பகவான் எச்சரிக்கிறர்.

(தொடரும்)

---

(29-ம் பக்கத் தொடர்ச்சி)

அந்த ஜென்மாக்களைப் பூசிக்கொண்டார் என்று பொருள். அசுத்தமான அந்த சாம்பலைப் பூசிக் கொண்டு அந்த ஆன்மாக்களுக்கு நன்நெறியை கொடுக்கிறராம்.

இப்படி யெல்லாம் குழந்தை சம்பந்தர் பாடுகிறபோது, அவருடைய தந்தை கேட்கிறர்; அவர் நான்கு வேதம், சாஸ்திரம் எல்லாம் கற்றவர்—மகனே! எனக்கு இந்த அனுபவம், ஞானம் வரவில்லையே! உனக்கு எப்படி வந்தது?

அதற்கு சம்பந்தர் அப்பா! இது முன் வினைப்பயன். 'ஏடுடைய மலரான் முனை நாட் பணிந்து ஏத்த அருள் செய்தான்''—முந்தின ஜன்மாவிலே இறைவனை தூமலர்கள் தூவித் துதித்து வணங்கியதன் பலன் இப்பொழுது கை கூடுகிறது. ''தொலினே ஜேசின பூஜா பலமு'' என்கிறர் தியாகப் பிரும்மம். பூர்வ ஜன்ம புண்ணியம் இருந்தாலன்றி இப்பேர்ப்பட்ட ஞானம் உதிக்காது.

சரி இப்படியெல்லாம் உனக்கு அருள் புரிந்தவன் யார்? என்று கேட்கிறர். இதோ ''இவன்'' என்று சம்பந்தப் பெருமான் தன் பிஞ்சு விரலினல் சுட்டிக் காட்டுகிறர். ''பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே'' பிரம்மா பூஜித்த காரணத்தால் சீர்காழிக்கு 'பிரம புரம்' என்றெரு பெயருண்டு. அந்த பிரமா புரமேவிய பெம்மான் இவனே என் உள்ளம் கவர் கள்வன் என்கிறர்.

வேதங்களாலும் சுட்டிக் காட்ட முடியாத இறைவனை திருஞான சம்பந்தப் பெருமான் 'சுட்டிக்' காட்டி விட்டார்.

இப்படி தமிழ் வேதமாகிய 'திருமுறை' ஆரம்பமாகிறது. ★



# வேதத்தினுட்பொருள்



**அ**ண்மையில் 'ஸப்தகிரி' மாத இதழில் 'வேதமும் வேங்கடமும்' என்னும் தலைப்பில் ஒரு அரியவேத ஆராய்ச்சிக்கட்டுரை வெளிவந்திருந்தது. ஸ்ரீமான். டாக்டர். எஸ். சங்கரநாராயணன் என்பவர் இதை எழுதியவர். இவர் நன்ருக வேதாத்யயநம் பண்ணினவர் என்பதும், வேதத்தின் கருத்தை நன்ருக அறிந்து எழுதும் ஆற்றல் பெற்றவர் என்பதும், ஷெ கட்டுரையைப்படிப்பவர்களுக்குத்தெள்ளென விளங்கும்.

எனக்கும் ஷெ கட்டுரையைப் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. "வேங்கட வெற்பென்னும் வேதவெற்பே" என்னும் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனுடைய ஸூக்தியின் உட்கருத்து ஷெ கட்டுரையினுல் திறமையாக வியாக்கியானம் பண்ணப் பட்டதாகவே எண்ணி மகிழ்வெய்தினேன். வெகு நாட்களாக இதே வேதவாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு ஏழுமலையானுடைய மகிமையை எழுதி வெளியிட வேண்டுமென்று நானும் எண்ணியிருந்ததுண்டு. இந்தக் கட்டுரை எனது முயற்சியை அவசியமற்றதாகச் செய்து விட்டது.

திருப்பதியில் திருமலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே-ஸ்ரீ மஹாவிஷ்ணுவே—என்பது பல கோடி நூருயிரம் பக்தர்களுக்கும் ப்ரத்யக்ஷம். வேறு தெய்வங்களின் சின்னங்கள் இந்த திவ்யமங்களவிக்ரஹத்தில் ஒன்றும் கிடையாது. ஸ்ரீவைஷ்ணவபரமைகாந்திகளான ஆழ்வார்கள் இந்தத்தலத்தைத் தமது நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில் பலவாருகப் பாடியிருக்கிருர்கள். சைவ சமயத்திலீடுபட்ட நாயன்மார்களில் ஒருவரும் இத்தலத்தைத் தமது தேவாரத்தில் எங்கும் பாடவில்லை. சிலப்பதிகாரம் என்னும் சங்க நூலில் இளங்கோவடிகள் இதை ஸ்ரீவைஷ்வஸ்தலமாகவே பாடியுள்ளார். மேலும். Dr. சங்கரநாராயணன் அவர்கள் எடுத்துக் காட்டியபடி யஜ்ஞரூபியான விஷ்ணுவே திருமலையில் வந்து ஸாந்நித்யம் பண்ணினதாக வேத மூல ப்ரமாணங்களாலும் நன்ருக அறியலாம். உண்மை இவ்வாறு அசைக்கமுடியாதவாருக அமைந்திருக்கிறது. இதில் தேவதாந்தரங்களாகவும் ஏழுமலையான் இருக்கக் கூடும் என்னும் ஸந்தேஹத்துக்கு ஆதாரம் ஒன்றும் கிடையாது. மற்றும் பல வேதவாக்கியங்களின் ஆதாரத்துடன் இதை விளக்குவோமிதில்.

जूरसि घृता मनसा ष्टा जुविष्ण वइत्याह
यज्ञो वै विष्णु यं डायैवैनाञ्जुष्टाङ्करोति"

(தைத். ஸம்ஹிதை—6—1—7)

''वैष्णवं वामन मालाभेत यं यज्ञोनोपनमे
द्विष्णुर्वै यज्ञो विष्णुमेव स्वेन
भागधेयेनोपधावति सएवास्मैयज्ञं प्रयच्छति"

(தைத்-ஸம். 2-1-8)

"विष्णुर्वै यज्ञो वैष्णवा वनस्पतयोयज्ञ एव यज्ञं
प्रतिष्ठापयति"

(தைத்—ஸம்—5—2—8)

"आग्नावैष्णवं घृते चरुं निर्वपेच्चाक्षुष्कामोऽ-
ग्नेर्वै
चक्षुषामनुष्या विपश्यन्ति यज्ञस्य देवा अग्नि-
ञ्चैव विष्णुञ्च स्वेन भागधेयेनोपधावति"

(தைத்—ஸம். 2—2—9)

இந்த வேதவாக்கியங்களில் ''யஜ்ஞமே விஷ்ணு'' என்றும், "விஷ்ணுவே யஜ்ஞம்'' என்றும் மாறி மாறிக் கூறப்படுகிறது. ''வை'' என்னுல் ஒரெழுத்துச் சொல் வேதத்தில் அடிக்கடி வருவதுண்டு. "இவ்விஷயம் மிகவும் பிரஸித்தமானது'' என்பது இதன் பொருள். அது ஷெ வாக்கியங்களில் ஸர்வஸாதாரணமாக உபயோகிக்கப்பட்டுள்ளது. மேலே காட்டப்பட்டுள்ள நாலாவது வாக்கியம் ஒரு விசேஷமான கருத்தையுட்கொண்டுள்ளது. "ஆக்நாவைஷ்ணவம்'' என்று தொடக்கத்தில் கூறி, தொடர்ந்து "यज्ञस्यदेवा:'' என்னுமிடத்தில் ''யஜ்ஞ'' மென்னும் சொல்லால் "விஷ்ணு'' வைக் குறித்து, மீண்டும் "अग्निञ्चैवविष्णुञ्च-स्वेन...'' என்று ''விஷ்ணு'' என்னும் சொல்லையே முடிவில் உபயோகிக்கிறது. இது ஒரு அஸாதாரணமான முறை. "விஷ்ணு—யஜ்ஞம் - இவையிரண்டும் வெவ்வேறு பொருள்களலல்ல. இரண்டும் ஒன்றே.'' என்பதை ஷெ ப்ரயோகம் உறுதிப்படுத்துகிறது. இப்படி யஜ்ஞத்துடன் தேவதாந்தரங்களை அபேதமாகக் கூறும் வாக்கியங்கள் வேதங்களில் எங்கும் கிடையாது. "யஜ்ஞம் விஷ்ணுவடிவத்துடன் திருமலையில் வந்து ஸாந்நித்யம் பண்ணிற்று'' என்று கூறும் வேதவாக்கியம் மற்றைத் தெய்வங்களையும் பொதுவாகக் கூறுவதாகக் கொள்வதற்கு ஆதாரமேதும் கிடையாது.

''யஜ்ஞம் எல்லாத் தெய்வங்களுக்கும் பொதுவானது. மற்றைத் தெய்வங்களுக்கும் யஜ்ஞத்தில் உரிமையிருக்கிறது'' என்னும் காரணத்தைக்காட்டி, ''ஏழுமலையான் வேறு தெய்வமாகவும் இருக்கக் கூடும்'' என்று ஷெ கட்டுரையில் கூறப் பட்டுள்ளது. இது பொருத்தமற்ற பெருங் கற்பனையேயாகும். ஒரு தபாலாபீஸில் பொதுமக்கள் அனைவருக்கும் உரிமையிருக்கிறது என்ருல் அதன் அர்த்தமென்ன? 'அனைவரும் போஸ்ட் மாஸ்டர்களே' என்பதா? இல்லை, இல்லை, தபாலாபீஸினுல் ஏற்படும் அனுகூலத்தை அனைவரும் சரிசமானமாக அடையலாம். அதுபோலவே யஜ்ஞத்தினுல் உண்டாகும் அனுகூலத்தை – ஹவிர்பாகம் பெறுவதை—ஸகலமான தெய்வங்களும் அடையலாம். அவ்வளவுதான். அதனுல் 'மற்றைத் தெய்வங்களும் யஜ்ஞஸ்வரூபமானவர்கள்'' என்பது ஸித்திக்காது. அந்நிலைமை விஷ்ணு ஒருவருக்கே உண்டு.

மேலே காட்டிய வேதவாக்கியங்கள் இதற்காதாரம். மற்றும் பல ஆதாரங்களைக் காண்மின்:

திருவேங்கட முடையானுடைய அர்ச்சனை நாமாவளியில் "वै खानसमुनि श्रेष्ठपूजिताय नमः" என்ருெரு திருநாமமுளது. வைகாநஸ முனிவரால் பூஜிக்கப்பட்டவர் என்பது இதன் பொருள். விகநஸமுனிவர் மறந்தும் புறந்தொழாதவரான ஸ்ரீவைஷ்ண பரமைகாந்தியானவர். அவருடைய சிஷ்யர்

திரு. என். எஸ் தேவநாதாச்சாரியார்,
ஸ்ரீரங்கம்.

களான வைகானஸர்களுமப்படிப்பட்டவர்களே. அனாதிகாலமாக அவர்களது பூஜையில் இருந்துவரும் "ஏழுமலையான்" ஸ்ரீமஹாவிஷ்ணுவாகவே தான் இருக்கமுடியும். வேறு தெய்வங்களாக இருக்க முடியாது.

திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் அந்தரங்கமான கைங்கர்யபரர்களெல்லாம் தொன்று தொட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களான ஆசார்ய புரு புருஷர்களாகவே இருப்பதையும் கவனிக்கவேணும். தேவதாந்தரங்களின் கோவில்களில் எங்கேயாவது இப்படி கண்டதுண்டோ?

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே குலதனமாக அமைந்துள்ள நாலாயிர திவ்ய ப்ரபந்தம் மற்ற வைஷ்ணவ ஸ்தலங்களில் போல் திருமலையிலும் அவ்வப்போது முறைப்படி ஸ்ரீ வைஷ்ணவ பரமைகாந்திகளால் ஓதப்பட்டு வருகிறது. "ஏழுமலையான்" வேறொரு தெய்வமாக இருந்தால் அது ஒருகாலும் நடக்காது. இதுவும் அசைக்க முடியாததொரு ஆதாரமாகும்.

"आक्रान्त्समुद्रः प्रथमे विधर्मञ्जनयन्प्रजा-
भुवनस्य राजा । वृषा पवित्रे अधिसानो अव्ये
बृहत्सोमा वावृधे सुवान इन्दुः ॥"

(தைத்-உபநிஷத்-2-1)

இந்த மந்திரம் திருப்பதி மலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையானையே குறிப்பதாக அறிவிற் சிறந்த பெரியோர்கள் பலரும் பணிப்பர். இதிலுள்ள சொற்களெல்லாம் யஜ்ஞரூபியான விஷ்ணுவையே கருத்தில் கொண்டுள்ளவை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்றது.

"अरायि काणे विकटे गिरिं गच्छ सदान्वे ।
शिरिंबिठस्य सत्वभि स्तेभि स्त्वा चात-
यामसि ॥"

(ரிக்வேதம்-10-155-1)

இது ரிக்வேதமந்திரம். இதுவும் திருப்பதி திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையானைப் பற்றியது என்பர் ரஸிகர்களான வேதவித்துக்கள். இதிலும் "ஸ்ரீயஃபதி"யாக எம்பெருமான் வர்ணிக்கப்பட்டிருக்கிறார். மற்றைத்தெய்வங்களுக்கு இந்தவாய்ப்பு கிடையாதே! அவர்களெல்லாம் "திருவில்லாத் தேவராயிற்றே" कः श्रीः श्रियः? என்று ஸ்ரீ ஆளவந்தாரும் "देवः श्रीमान्" என்று ஸ்ரீமந்நிகமாந்த மகாதேசிகனும் பலகாலும் ஈடுபட்டிருக்கின்றனர்.

"मिषतां सर्वदेवानां ययौ वक्षःस्थलं हरेः"

என்கிற புராணஸூக்தியும் இதே கருத்தையுடையதே. ஏழுமலையான் விஷ்ணுவே என்பதற்கு இதுவுமோராதாரம்.

ஜ்யோதிஷ்டோமயாகமெனப்படும் ஸோமயாகத்தின் முடிவில் "ஸமிஷ்டயஜுஸ்" எனப்படும் மந்திரத்தைச் சொல்லி ஒரு ஹோமம் பண்ணுவார்கள். இத்துடன் யாகம் பூர்த்தியாகிவிடும். அதனால் இது 'பூர்ணாஹுதி' யாகவே அமையும்.
அந்தமந்திரம் :—

"यज्ञ यज्ञं गच्छ यज्ञपतिङ्गच्छ स्वां योनिङ्गच्छ
स्वाहैषते यज्ञो यज्ञपते सहसूक्तवाकस्सु वीर-
स्सहा देवागातु विदो गातुं वित्वा गातु मित
मनसस्पत इमन्नोदेव देवेषु यज्ञ स्वाहा वाचि-
स्वाहा वातेधाः"

(தைத் ஸம். 1-4-44)

என்பது. தைத்திரீய ஸம்ஹிதையில் ஆறாங்காண்டம், ஆறாம் ப்ரச்நம், இரண்டாவது அனுவாகத்தில் வேதமே ஷிமந்திரத்தின் மகிமையை விளக்குகிறது. வேதபாஷ்யகாரரும் இதற்கு ஸ்பஷ்டமாக அர்த்தம் எழுதியிருக்கிறார். ஸௌகர்யமுள்ளவர்கள் பார்த்து அனுபவிக்கலாம், சுருக்கமாக இதன் கருத்தை இங்கு எழுதுகிறேன்.

இந்த மந்திரத்துக்கு ஸமிஷ்டயஜுஸ் என்றுபெயர். "பண்ணப்பட்ட யாகம் நன்றாகப் பண்ணப்பட்டதாக (இம்மந்திரத்தினால்) ஆகிறது." என்பது இப்பெயரின் பொருள். யாகத்தில் பற்பல ஹோமங்கள் பண்ணப்படுகின்றன. அவற்றுள் இதுவே கடைசியானது. இதைப் பண்ணுவதனால் ஏற்கனவே பண்ணப்பட்ட ஹோமங்கள் "நன்றாக"ப் பண்ணப்பட்டதாகும். இதைப் பண்ணுவதனால் ஏற்கனவே பண்ணப்பட்ட ஹோமங்கள் நன்றாகப் பண்ணப்பட்டவைகளாகாது. அவற்றிலெல்லாம் இல்லாத விசேஷமான மகிமை இந்த ஸமிஷ்டயஜுஸ் மந்திரத்திற்கு உளது; பெயருக்கேற்ற பெருமை பெற்றது இம்மந்திரம். இதில் முக்கியமான தேவதை யஜ்ஞரூபியான விஷ்ணுவே தான். இது மூன்று மந்திரங்களாக அமைந்துள்ளது. "यज्ञ ! यज्ञंगच्छ...स्वाहा" என்பது. இவற்றில் முதலாவது மந்திரம். "யஜ்ஞமே! நீ யஜ்ஞத்தையே அடைந்துவிடு" என்பது இதன் பொருள். இதற்கு வேதபாஷ்யகாரர் அர்த்தம் சொல்லுகிறார் :-

"हे यज्ञ ! त्वं स्वप्रतिष्ठार्थं यज्ञनामकं विष्णुं गच्छ"

என்று. இதன் தருத்து :- யஜ்ஞமே! நீ நிலைத்து நிற்பதற்காக யஜ்ஞமெனுப்படும் விஷ்ணுவை அடைந்துவிடு" என்பதாம்.

முடிவில் நிலைபெற்று நிற்குமிடத்திற்கு "ப்ரதிஷ்டா" என்று பெயர். 'திருவனந்தபுரம் எக்ஸ்ப்ரஸ்' என்றொரு ரயில்வண்டி ஓடுகிறது. அது சென்னையிலிருந்து புறப்படுகின்றது. பற்பல ரெயில்வே ஸ்டேஷன்களிலும் நின்று - நின்று - மீண்டும் - மீண்டும்- புறப்பட்டுச் செல்கின்றது. திருவனந்தபுரம் சேர்ந்ததும் மற்றுமொரு இடத்துக்குப் போவதில்லை. எக்ஸ்ப்ரஸ் வண்டிக்கு, திருவனந்தபுரம்தான் "ப்ரதிஷ்டை". இடையிலுள்ள ஸ்டேஷன்களில் எதுவும் "ப்ரதிஷ்டை" யாகாது. அதுபோலவே பற்பலதேவதைகளை உத்தேசித்துப் பலவிதமான யாகங்கள் செய்யப்படுகின்றன. இந்த யாகங்களிலெல்லாம் கடைசியில் யஜ்ஞரூபியான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை உத்தேசித்து ஒரு ஹோமம் பண்ணி அத்துடன் முடித்துவிடவேணும். பிறகு வேறெந்த தெய்வத்துக்கும் ஹோமம் கிடையாது.

இவற்றுள் மூன்றாவதும் முடிவிலுள்ளதுமான மந்திரம் "देवागातुविदो ...वातेधा" என்பது. இதைச் சொல்லி ஹோமம் பண்ணினவுடன் யஜமானன் சொல்லவேண்டிய உத்தேசத்யாகம் "यज्ञाय परमात्मान इदं न मम" என்பதாம். ஸ்ரீ வைஷ்ணவர்கள், மற்றவர்கள் அனைவரும் வித்யாஸ மில்லாமலே— ஒரே விதமாகத்தான் இந்த உத்தேசத்யாகத்தைச் சொல்லவேணும். இந்த வழக்கம் — ப்ரபஞ்சம் தோன்றிய காலத்திலிருந்து இன்றுவரை சிறிதும் மாறுபடாமல் தொடர்ந்து வருகிறது. வேத மந்திரத்தை யாரும் ஒன்றும் செய்யமுடியாதே!.

''அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவரிறையவரென அடியடைவர்கள்
அவரவரிறையவர் குறைவிலரிறையவர்
அவரவர் விதிவழியடைய நின்றனரே''
(திருவாய்மொழி-1-1-5)

என்னும் நம்மாழ்வாருடைய பாசுரமும் இதே கருத்தைக் கொண்டுள்ளமை காண்க.

" देवा गातुविदो गातुं वित्त्वागातुमितेत्याह
यज्ञ एव यज्ञं प्रतिष्ठापयति यजमानस्यापरा-
भावाय"
(தைத். ஸம்-6-6-2)

என்னும் ப்ராம்மணவாக்யம் (உரைப் பகுதி) ஷெ கருத்தை ஐயந்திரிபற விளக்கமாகவே எடுத்துரைப்பதைக் காணீர்!

सहयज्ञाः प्रजास्सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्व मेषवोऽस्त्विष्ट कामधुक् ।।"
(பகவத்கீதை-3-10)

என்னும் ஸ்ம்ருதிவாக்யம் ப்ரபஞ்சம் தோன்றும் பொழுதே யஜ்ஞுமும் தோன்றிவிட்டது என்று கூறுகிறது. எந்தக் காரியத்தை ஸாதிக்கவேண்டியிருந்தாலும் அதற்கு ''யஜ்ஞ'' மொன்றே உபாயமாகிறது. அதனுல் தான் பிரபஞ்சத்தைப் படைத்த பகவான் யஜ்ஞத்தையும் கூடவே ஸ்ருஷ்டி பண்ணிவிட்டான். एषवोऽस्त्वि ष्टकामधुक्" என்னும் ஷெ ச்லோகத்தின் நான்காம் பாதம் மிகுந்த அர்த்த புஷ்டி யுள்ளது. பிரஜைகளில் ஒவ்வொருவரும் தம்தமது விருப்பத்தை யஜ்ஞத்திலேயே— யஜ்ஞத்தைப் பண்ணுவதன் மூலமோ— பெற்றனர். அந்த யஜ்ஞமே இப்பொழுது ஏழு மலையானுக வந்துதோன்றி அவரவர்களுடைய அபிலாஷங்களையெல்லாம் பூர்த்தி செய்து கொண்டு விளங்குகிறது. வேறு தெய்வங்களுக்கு இது சிறிதும் பொருந்தாது.

வாசக சப்தங்களுள் முதன்மையானது ''அ'' காரம். வாச்யமான பொருள்களுள் முதன்மையானவர் ஸ்ரீ மஹாவிஷ்ணு. இவ்விரண்டுக்கும் அஸாதாரணமான ஸம்பந்தமுள்ளது. "अक्षराणामकारोऽस्मि" என்கிறது பகவத் கீதை. ''அகர முதலவெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றே உலகு'' என்கிறது திருக்குறள். அதுவேபோல், நாம் செய்யும் ''கர்ம''ங்களுள் மிக மிகச் சிறந்தது. ''யஜ்ஞம்'' "यज्ञो हिश्रेष्ठतमं कर्म" என்கிறது வேதம். (தைத்-ப்ரா. 3-2-1.)

யஜ்ஞத்தினுல் ஆராதிக்கப்படும் தெய்வங்கள் பலவற்றுள் விஷ்ணுவே முதன்மையானவர். ஸோமயாகத்திற்கங்கமான தீக்ஷணீ யேஷ்டிக்கு அக்னியும் விஷ்ணுவும் இருவருமான சேர்த்தியில் தேவதைகளாம். இந்த இஷ்டி "आग्नावैष्णवं" என்று வழங்கப்படும். இதில் அக்னியும் விஷ்ணுவும் சேர்ந்து தேவதைகளாக இருப்பதனுல் வந்த பெருமையை வேதம் விளக்குகிறது:

''अग्निरवमो देवतानां विष्णुः परमो यदाग्ना-
वैष्णवमेकादशकपालं निर्वपति देवताएवो
भयतः परिगृह्य यजमानो वरुंधे"
(தைத்-ஸம்-5-5-1.)

என்னும் வாக்கியத்தால், தேவதைகளுக்குள் கடையானவன் ''அக்னி'' உத்தமமானவர் ''விஷ்ணு''. இவ்விருவரையும் இந்த யாகத்தில் தேவதைகளாகக் கொண்டதனுல் நடுவிலுள்ள தேவதைகளனைவரையும் ஆராதித்த புண்யம் யஜமானனுக்குக் கிடைக்கிறது'' என்பது இதன் கருத்து: இப்படி தெய்வங்களிற்சிறந்தவிஷ்ணுவும், கருமங்களிற் சிறந்த யக்ஞமும் அபேதமாக, வேதஸம்ப்ரதாயத்தில் கருதப்படுகின்றன. வேறு தெய்வங்களுக்கு இப்படிப்பட்ட வாய்ப்பு வேதஸம்ப்ரதாயப்படி கிடையாது. ஆதலால் ''விஷ்ணு'' ரூபமாகத் திருமலையில் ஸாந்நித்யம் செய்யும் யஜ்ஞம் வேறு தெய்வமாக இருக்க முடியாது.

அலங்கார சாஸ்திரத்தில் ''உல்லேகாலங்காரம்'' என்ருெரு அலங்காரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரே பொருளை ஒருவரையோ - அல்லது-பலர் கூடியோ-பலவாருகக் கற்பனை செய்வதுதான்அது. கவிகளின் சாதுர்யத்தினுல் காவ்ய நாடகங்களில் ரஸிகர்களைப் பரவசப்படுத்து மிது. இந்த ''உல்லேக''த்தினுல் பொருளில் வேறுபாடு உண்டாகாது. ரஸமான கற்பனைதான் பலவாருக இருக்கும். அதுபோல் ஏழுமலையான் விஷயத்திலும் மேற்படி கட்டுரையில் பல வாருன கற்பனைகள்-பலராலும்-ஒருவராலும் பண்ணப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. காவ்யங்களிலிருப்பது போலன்றி-பொருளையேவேறுபடுத்துவதற்காக இக்கற்பனைகள் தோற்றுவிக்கப்பட்டவை என்று தோன்றுகிறது: இது அசாத்தியமான தொன்று. ஸ்ரீமந் நாராயணனுக்கே அஸாதாரணமான அங்க அடையாளங்களாலும் - திவ்யாயுதங்களின் சேர்த்தியாலும்-பலகோடி நூறுயிரம் பக்தர்களுடைய ப்ரத்ய க்ஷத்தாலும். ''கோவிந்தா! கோவிந்தா!!'' என்னும் வானளாவும் கோஷத்தினுலும் வேதமூல ப்ரமாணத்தினுலும் திருவேங்கடமுடையான் ஸ்ரீ மஹா விஷ்ணுவே என்று அசைக்க முடியாத வாறுக நிச்சயமான விஷயத்தில், ஒருவருடைய கற்பனை, உண்மையை மாற்ற முடியாது. பூர்வமீமாம்ஸா பாஷ்யகாரரான சபர ஸ்வாமி யினுடைய பொன் மொழிகள் சில வற்றைக் காண்மின்:

"यच्च नाम ज्ञानं न विपर्येति, न तत् शक्यते
वक्तुं नैतदेवमिति । यथा भवति-यथा विज्ञा-
यते नतथा भवति; यथैतन्नविज्ञायते तथैवै
तदिति । अन्यदस्य हृदये अन्यद्वाचि स्यात्"
(பூர்வ மீமாம்ஸாதர்சநம் 1-1-5)

"नच शक्यमेवमवगन्तुं-यथोपलम्यन्तेऽर्थाः न
तथा भवन्तीति । यथातुखलुनोपलम्यन्ते
तथा भवन्तीति । तथाहिसति, शशोनास्ति-
शशस्य विषाणमस्तीत्यवगम्येत"
(பூர்வ மீமாம்ஸாதர்சநம் 1-1-5)

1. ''மாறுபடாத ஒரு ஜ்ஞாநத்தைப் பொய்யென்ன முடியாது. எப்படி (ஒரு பொருள்) இருக்கிறதோ, எப்படித் தெரிகிறதோ, அப்படி (அந்தப் பொருள்) இல்லை. எப்படித் தெரிய வில்லையோ, அப்படி (அந்தப் பொருள்) இருக்கிறது என்று ஒருவன் சொல்வானுகில் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுபவனுகி விடுவான் அவன்''

2. பொருள்கள் என்ன விதமாக அறியப்படுகின்றனவோ, அவ்வாறு அவை இல்லை. எவ்வாறு அறியப் படவில்லையோ அவ்வாறு இருக்கின்றன. என்றிப்படி முடிவு காண்பது, ''முயல் இல்லை. அதன் கொம்பு இருக்கிறது'' என்பதற் கொப்பாகும்''

என்பவை முறையே மேற்படி பாஷ்ய வாக்கியங்களின் கருத்து:

இப்படி ஆதாரமில்லாத கற்பனைகளால் ஒருக்காலும் உண்மை அழியாது என்பதை ப்ராமாணிகர்கள் நன்கறிவர்.

"பழுதையில் ப்ரத்யக்ஷமாகவே தான் பாம்பு தெரிகிறது; மற்றும் பூமியில் உண்டாகும் வெடிப்பு, நீர்த்தாரை, இதுபோன்ற பல வஸ்துக்களும் அதே பழுதையில் தோன்றுகின்றன. பழுதை ஒன்று மட்டுமே முடிவில் நிலைத்து நிற்கிறது. மற்றவையெல்லாம் "பொய்"யாகி விடுகின்றன. அதுபோலவே யஜ்ஞரூபியான ஏழுமலையானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் பல தெய்வங்களையும் காணலாம். ஆனால் அவையெல்லாம் பொய் (விஷ்ணு உள்பட). யஜ்ஞ மொன்றே நிலைத்து நிற்கும்." என்னும் வாதம் மேற்படி கட்டுரையில் காணப்படுகிறது. இது சரியானதில்லை. திருவேங்கடமுடையான் விஷ்ணுவாகவே ப்ரத்யக்ஷமாகவும் வேதமூல ப்ரமாணத்தாலும் அறியப்படுகிறார். இவ்விரண்டு ப்ரமாணங்களிலொன்றாலும் அவர் வேறு தெய்வமாக அறியப்படவில்லை. யஜ்ஞமே விஷ்ணு-விஷ்ணுவே யஜ்ஞம் என்பதை வேதவாக்கியங்களின் மூலம் பரக்க நிரூபித்துள்ளோம் இக்கட்டுரையில். ஆதலால் ஏழுமலையான் விஷ்ணுவே. வேறு தெய்வமொன்றுமில்லை, என்பது அசைக்க முடியாத உண்மையாகி விட்டது. இவ்வளவிலும் இதில் "பொய்" என்று துணிந்து கூறுவது தகாது. இது போன்ற வாதம் நமக்குப் புதிதல்ல. ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பாகவே இது நம் நாட்டில் இருந்து வருகிறது. ப்ராமாணிகர்கள் இதன் தத்துவத்தை வெகு நன்றாகவே எடுத்துரைத்திருக்கிறார்கள். ஒன்றே காட்டுவோமிங்கு :-

"तस्मात् यस्य च दुष्टं करणं, यत्र च मिथ्येति प्रत्ययः, सएवासमीचीनः प्रत्ययो नान्यः"

(பூர்வமீமாமஸா-சாபரபாஷ்யம்—1–1–5)

"எந்தஜ்ஞானத்தின்" காரணம் "தோஷமுள்ளதோ, அல்லது எந்த ஜ்ஞானத்திற்குப் பிறகு 'இதுபொய்' என்னும் மற்றொரு ஜ்ஞானம் உண்டாகிறதோ, அவ்விரண்டு ஜ்ஞானங்களே "பொய்" யாகும். மற்றது பொய்யாகாது" என்பது கருத்து.

திருவேங்கடமுடையான் "விஷ்ணு" என்பது ப்ரத்யக்ஷத்தினால் அறியப்படுகின்றது. இதற்குக் காரணம் "அவன்" கொடுத்த கண்ணேதான். பல்லாயிரம் கோடி பக்தர்களும் இப்படியே பார்ப்பதனால் கண்ணில் தோஷம் இல்லையென்பது ஸித்தம். யாருக்கும் "இவர் விஷ்ணுவென்னும் ஜ்ஞானம் 'பொய்' என்று தோன்றவே இல்லை. வேதத்தினால் உண்டாகும் அறிவும் "திருவேங்கட முடையான் யஜ்ஞரூபியான விஷ்ணுவே" என்பது தான். இதிலும் காரணதோஷம் - பாதகப்ரத்யயம் இரண்டுமில்லை. ஆதலால் இதில் விவாதத்திற்கு இடமே இல்லை. "வேறு எவருக்கும் தோன்றாவிட்டாலும் "எனக்கு" இப்படி விபரீதமாகத்தோன்றுகிறது" என்கிறார் ஷை கட்டுரையாளர். ஒருவருக்குத் தோன்றுவது காரணமாக ஆயிரங்கோடி அடியார்களுடைய அனுபவமும் வேதமூலப்ரமாணமும் தவறாகி விடாது. சம்பந்தப் பட்டவர் தான் தன்னைத் திருத்திக்கொள்ளவேணும்.

" अभिनिवेशवशीकृतचेतसां बहुविदामपि संभवतिभ्रम."

என்னும் மஹான்களுடைய ஸ்ரீஸூக்தியையே இங்கு நினைக்கவேண்டியிருக்கிறது.

गौणं लाक्षणिकंवापि वाक्य भेदेन वा स्वयम् ।
वेदो यमाश्रयत्यर्थं, को नु तं प्रतिकूलयेत्? ।।"

(தந்த்ரவார்த்திகம்-1-3-4)

என்பது குமாரிலபட்டருடைய பொன்னான வார்த்தை. "வேதத்தினுட்பொருளை யாரால் எதிர்க்க முடியும்?" என்பது இதன் கருத்து.

"எனவே ஏழுமலையானைத்திருமால் எனக்கொள்வதற்கே வேதமாகிய தாகக் காண்கிறது" என்றே கூற வேண்டியதாகிறது"

என்று இவரே ஷை கட்டுரையில் உள்ளதை உள்ளபடியே எடுத்துக் கூறுகிறார்.

(செப்டம்பர் மாதம்-ஸப்தகிரி-பக்கம் 23-பாரா-3.)

இதையெல்லாம் "ஸப்தகிரி" வாசகர்கள் நன்குகவனிக்க வேணும்.

ஒரு வேதவாக்கியத்தைத் தவறுதலாக இவர் எழுதிவிட்டிருக்கிறார். அதை மட்டும் விளக்கி இக்கட்டுரையை முடிக்கிறேன். க்ருஷ்ண யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதையில்ஆறுங்காண்டம் இரண்டாம் ப்ரச்னத்தில் ஸோமயாகத்தின் உத்தர வேதியைப்பற்றின விஷயம் சொல்லப்படுகிறது. இதில் "अथकस्त्वमिति" என்னும் வாக்கியம் உள்ளது. இதை இவர் எழுதும் போது தவறுதலாக "अथ कस्त्वमसीति" என்று எழுதியிருக்கிறார். இது சாதாரணமான விஷயமில்லை. மாபெருந்தவறு. இது திருத்தப்பட வேண்டும். இல்லையேல் நாளடைவில் இதுவே சரியான பாடமென்று பலர் வாதம் செய்யவாரம்பித்துவிடுவர். நமது பாரதபுண்ணிய பூமியில் வேதமொன்றுதான் மக்களைச் சிதறிப் போகாதவாறு ஒற்றுமைப் படுத்துகிறது. ஸ்மார்த்தர்கள்—வைஷ்ணவர்கள் என்பது போன்ற வித்யாஸம் இதொன்றில் இன்னும் தலைகாட்டாமல் இருக்கிறது. வருங்காலத்தில் வேதாத்யயனம் செய்பவர்கள் மிக மிகக் குறைந்து போவார்கள். இதைத் தவறு என்று தைரியமாகச் சொல்வதற்குக் கூட அவர்களுக்குத் தெரியாது. இதை வெகு அவசரமாக மறவாமல் இவர் திருத்தியாக வேண்டும்

இவ்விஷயத்தில் அவசியம் கூற வேண்டிய விஷயங்கள் மற்றும் பல உள்ளன. விரிவைத்தவிர்க்க வேண்டி இப்பொழுது இவ்வளவில் நிற்கிறேன்.





# வான்புகழ் வள்ளுவன்

(சென்ற முன் இதழ்த் தொடர்ச்சி)

திருவள்ளுவர் மனித சமுதாயத்துக்குத் தேவையான கருத்துக்களைத் தனது திருக்குறளில் முழுமையாகத் தெள்ளத் தெளிய எடுத்தியம்பியிருந்தாலும் கடவுட் கருத்தை ஆங்காங்கே சுட்டிக்காட்டத்தவறவில்லை. ஆனால் கடவுள் உருவமோ-இதுதான் கடவுள் என்கின்ற முடிவுக்கோ அவர் சொன்னாரில்லை. ஆனால் மனித இதய வழிமுறைக்கு இறைபக்தியின் இன்றியமையாமையைக் காட்டியுள்ளார்.

முதல் பத்துக் குறட் பாக்களும் கடவுள் வழிபாட்டினை மிகச் சிறப்பாகவே காட்டுகின்றன.

எழுத்துக்கள் எல்லாம் 'அ' என்னும் அகரத்தை அடிப்படையாகக் கொண்டு இருக்கின்றன. அதுபோல உலகம், கடவுளை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது என்றபொருள் பட,

'' அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு ''

என்று அவர் திருக்குறளைத் துவக்கியுள்ளார்.

தூய அறிவு வடிவாக விளங்கும் இறைவனுடைய நல்ல திருவடிகளைத் தொழாமல் இருப்பாரானால் அவர் கற்ற கல்வியினால் ஆகிய பயன் என்ன? என்று அடுத்தக் குறளிலிலேயே கேட்டுள்ளார். அதனை,

'' கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் ''

என்று எழுதி, அன்பரின் அகமாகிய மலரில் வீற்றிருக்கும் கடவுளின் சிறந்த திருவடிகள் இடைவிடாமல் நினைக்கின்றவர் இன்ப உலகில் நிலைத்து வாழ்வார் என்பதை,

''மலர்மிசை ஏகினான் மாணடிசேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார் ''

என்று சுட்டிக் காட்டினார்.

கடவுளுக்கு விருப்பு - வெறுப்பு என்பது இல்லை, அவருக்கு எல்லாரும் ஒன்றே. அப்படிப்பட்ட கடவுளின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு எப்போதும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் துன்பமில்லை என்பதை,

'' வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல ''

என்று தனது குறள்மூலமாகத் தெரிவிக்கின்றார்.

---

*திரு. கி. மாநிலன் - சென்னை.*

---

கடவுளின் உண்மைப்புகழை விரும்பி அன்பு செலுத்துகின்றவரிடம் அறியாமையால் விளையும் இருவகை வினையும் சேர்வதில்லை என்று மிகவும் திடமாகக் குறிப்பிடுகிறார் கீழ்வரும் குறளில்.

'' இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

அதுமட்டுமல்ல. ஐம்பொறி வாயிலாகப் பிறக்கும் வேட்கைகளை அளித்தஇறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறியில் நின்றவர், நிலைபெற்ற நல்ல வாழ்க்கை வாழ்வார் என திடமாகக் கூறுகின்றார்.

மேலும் தனக்கு ஒப்புமை இல்லாத இறைவனுடையதிருவடிகளையே தொழுது தினைக்கின்றவர்க்கு அல்லாமல் மற்றவர்க்கு மனக்கவலையை, மாற்ற முடியாது என்றும் அறக்கடலாக விளங்கும் கடவுளின்திருவடியே எண்ணி நினைக்கின்றவர்க்கு அல்லாமல் மற்றவர் பொருளும், இன்பமுமாகிய மற்றக் கடல்களைக் கடக்க முடியாது என்றும் கடவுளைப்பற்றி அவர் எடுத்துக் கூறுகிறார்.

பெண்களின் பெருமையை நமக்கு உணர்த்தத் தலைப்பட்ட வள்ளுவர்,

'' தெய்வந்தொழாஅள் கொழுநண் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை ''

என்று சொன்னது கூட கணவனையே தெய்வமாய் தொழுதல் வேண்டும். வேறு தெய்வங்களைக் கூட வணங்க வேண்டாம். அப்படி தொழுகின்ற நல்ல உயர் பண்பு உடைய பெண் மனத்தால் எண்ணுவது எல்லாம் கூட நடைபெறும்என்றுகூறுகிறார்.ஆகவே பெய்யெனப் பெய்யும் மழை என்றால் அதனை-இறைவன் அந்த உயர் குண மிக்க இல்லாளுக்கு அத்தகைய சக்தியினை - அருளிச் செய்வான் என்கின்ற நோக்கோடே பெய்யெனப் பெய்யும் மழை என்று எழுதிக்காட்டியுள்ளார்.

'' இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றியான் ''

என்று அவர் எழுதியதின் நோக்கம் கூட பிச்சையெடுத்து வாழ்தல் கூடாது. அத்தகைய செயல் மானிடர் செய்தல் நலமன்று. உழைத்து உண்ணவேண்டும். பிச்சையெடுத்தல் ஒரு படைப்பு அன்று. அப்படி இறைவன் ஒரு படைப்பாக அதனை செய்திருக்க முடியாது என்பதை தெளிவாக்கத்தான் உலகத்தைப் படைத்தவன் உலகில் சிலர் இரந்தும் உயிர் வாழுமாறு ஏற்படுத்தியிருந்தால் அவனே பிச்சையெடுத்து எங்கும் அலைந்து கெடுவானாக. எனவே அதனை (பிச்சை

கயடுத்தலே) ஆண்டவன் படைப்பாக ரெுதவேண்டாம் என்று எச்சரிக்கின் ரூர். இது, அவர் காலத்திலேயே பிச்சை யெடுப்பவர்கள் இருந்தார் கள் என்பதையும், அவர்கள் அந்தச் செயலே இறைவன் மீது பழி சுமத்தி யுள்ளனர் என்பதும் நமக்குப்புரியவரு கின்றது.

மனித இயல்புகளேக் கூறி அதன் பயன்களே நமக்கு வள்ளுவர்விளக்கிய தோடு அல்லாமல் கேட்காத செவி-பார்க்காத கண்கள் போல் எண் குணங்களே உடைய கடவுளின் திரு வடிகளே வணங்காதவரின் தலேகள் பயனற்றவைகளாம் என்பதை,

"கோளில் பொறியில் குணமிலவே
எண்குணத்தான்
தாளே வணங்காத் தலே" என்ருர்.

இறைவனுடைய திருவடிகளே என் றும் இதயத்துள் உருகி நினேக்கின்ற வர்களாலேயேதனதுஇப்பிறவியாகிய பெரிய கடலேக் கடக்க இயலும்; மற்றவர்களால் அது ஒரு போதும் முடியாது என்று தெள்ளத் தெளியக் கூறி தனது கடவுள் வாழ்த்தை,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார்"

என்று முடிக்கின்ருர்:

இங்ஙனம் பத்துக் குறட்பாக்களே அறத்துப்பாலின் ஆரம்ப பாடல் களாக ஆண்டவனுக்கு அவர் அர் பணித்த விதம் எண்ணி வியக்கத்தக் கது. விவரிக்க இயலாத ஒரு பெரும் சக்தியினே நமக்குச் சுட்டிக் காட்டும் ஒரு தெய்வீக வழிகாட்டியாகவே அவரை நாம் எண்ணத் தோன்று கிறது. எனவேதான் அவரை வான் புகழ் வள்ளுவன் என்கிருேம்.

வாழ்க வள்ளுவம்.

---

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆக்கப்பூர்வமான பலவழிமுறைகளே மேற்கொள்ளவும், 11-1-81 அன்று திருப்பதியில் திருமலே திருப்பதி தேவஸ்தானம் தென்னுட்டைச் சேர்ந்த ஆந்திரா, தமிழ்நாடு, கர்னுடகம், கேரளா ஆகிய மாநிலங் களேச் சார்ந்த பல்வேறு இந்து சமய அமைப்புக் குழுக்களின் பிரிதிநிதிகள் பங்கேற்ற மாநாடு ஒன்றினேக் கூட்டி யது. இம் மாநாட்டில் மேற்கூறிய மாநிலங்களேச் சேர்ந்த சுமார் 50 பிரதிநிதிகள் கலந்து கொண்டு தங் களுடைய கருத்துக்களே எடுத்துக் கூறினர். இம்மாநாட்டிற்கு கர்னுடக மாநிலம் பெஜாவர் மடத்தின் சுவாமிஜி அவர்கள் தலேமை வகிக்க, திருமலே ஸ்ரீ சின்ன நாராயணஜீயர் மற்றும் பம்பாய் பிரம்மசாரி ஸ்ரீவிஸ்வநாத்ஜி ஆகியோர் சிறப்பு ரையாளர்களாக பங்கேற்க, தி. தி. தே. செயலாட்சித்தலேவர் மாநாட் டிற்கு வருகைபுரிந்தோரை வர வேற்று, மாநாட்டின் அவசியத்தை எடுத்துக்கூறினுர். மாநாட்டில் கீழ்க்கண்ட முடிவுகள் எடுக்கப் பட்டன.

இந்து சமயத்தின் எல்லா சமயப் பிரிவு அமைப்புக்குழுக்கள், இந்து தர்ம ரக்ஷ்ணு சமஸ்தா எனும் பெய ரில் பங்கேற்று செயற்படும். இவை மத்திய கூட்டமைப்பு குழு மற்றும் மாநில செயற்குழு என்னும் தலேமை களில் தன் கருத்துக்களே செயற் படுத்தும். இக்குழுக்களில் விஷ்வ இந்து பரிஷத், ராமகிருஷ்ணுமடம், ஆர்ய சமாஜம், சின்மயா மிஷன், டிவைன் லேஃப் ஸொஸைட்டி, விவேகானந்தா நினேவு மண்டபம், பாரத சத் சங்கம், உலக ஆசிரியர் நிறுவனம் ஆகியன இந்த சமய அமைப்புக் குழுக்களில் இடம் பெறும். இந்து சமயத்தின் அடிப் படைக் கருத்துக்கள், சமுதாயத்தால் பின்தள்ளப்பட்ட மக்கள் வாழும் சேரிகளேயும் மற்றும் சாமான்யர்களே யும் மனதிற்கொண்டு பரப்பப்படும்.

இவ்வகையில் இந்து தர்ம ரக்ஷ்ணு சமஸ்தா தன் முதல் கட்ட வேலே யாக ஆந்திராவில் 50 தாலுக்காக் களில் 'ஸ்ரீ வேங்கடேஸ்வர பக்த சங்கம்' எனும் பெயரில் இந்து சமய நிகழ்ச்சிகளே மேற்கொள்ளும். இது மற்ற மாநில அமைப்புக் குழுக் களுக்கு வழிகாட்டியாக அமையும்.

மத்திய மற்றும் மாநில அமைப்புக் குழுக்கள் மேற்கொள்ளும் திட்டங் களுக்கு தி. தி. தேவஸ்தானம் இணேப்பமைவாக இருந்து உதவி புரியும்.

## 310 வது கீதா ஞான யக்ஞம்

தவத்திரு சுவாமி சின்மயானந்தா அவர்களின் 310 வது கீதைச் சொற் பொழிவுத் தொடர் திருமலே திருப்பதி தேவஸ்தானம் மற்றும் திருப்பதி சின்மயா மிஷன் கூட்டு ஆதரவில் 20-1-81 முதல் 28-1-81 வரை திருப்பதியில் நடைபெற்றது. இதனே ஒட்டி ஏற்பாடு செய்யப் பட்ட துவக்க விழா 19-1-81 அன்று நடைபெற்றது. பிரபல கர்நாடக இசைப்பாடகி திருமதி. எம். எஸ். வசந்தகுமாரி அவர்களின் இறை வழிப்பாட்டுப் பாடலுடன் விழா இனிது துவங்கியது. திருப்பதி சின் மயா மிஷன் தலேவர் திரு. எம். பலராம ரெட்டி அவர்களின் வர வேற்புரையைத்தொடர்ந்து, சித்தூர் நியூட்ரின் கம்பெனி உரிமையாளரும் மத்திய சின்மயா மிஷனில் முக்கிய அங்கம் வகிப்பவருமான திரு. துவாரகநாத்ரெட்டி அவர்கள் இக் கீதைச் சொற்பொழிவு தொடரைத் துவக்கி வைத்தார். தி. தி. தே. செயலாட்சித் தலேவரவர்கள் விழா விற்குத் தலேமைவகித்துஉரையாற்று கையில் இந்து சமயத்தின் அடிப் படைக் கருத்துக்களே மக்களிடையே பரப்பிடும் வகையில் தி. தி. தே. மேற் கொண்டுவரும் ஆக்கப் பூர்வ மான திட்டங்களே விளக்கிப் பேசி ஞர். தி. தி. தேவஸ்தானத்தின் இந்து தர்ம பிரதிஷ்ட்டானத்தின் செயலர் டாக்டர். டி. அர்க்கசோம யாஜி அவர்கள் நன்றி நவின்றதைத் தொடர்ந்து, தவத்திரு சுவாமி சின் மயானந்த அவர்கள் தன் சிறப்புரை யில், தொடர்ந்து தான் ஆற்ற இருக் கும் கீதையின் 15ம் அத்தியாயத்தின் முக்கியத்துவத்தை எடுத்துரைத் தார்.

* * *

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி: ஜி: அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி.

மற்ற இராமாயணங்களில் கூறப்பட்ட விசேஷத்தை அத்யாத்ம இராமாயணம் இப்பொழுது இங்குக் கூறுகிறது.

**यद्येवं देवि ! मे स्कन्धं आरोह क्षणमात्रतः ।**
**रामेण योजयिष्यामि मन्यसे यदि जानकि ॥**

"தாங்கள் விரும்பினால் என் தோளில் ஏறிக்கொள்ளுங்கள். இராமனோடு தங்களைச் சேர்த்துவிடுகிறேன்" என்று. இதைக் கேட்ட சீதை,

**रामः सागरमाशोष्य बद्ध्वा वा शरपञ्जरैः ।**
**आगत्य वानरैः सार्धं हत्वा रावणमाहवे ॥**
**मां नयेद्यदि रामस्य कीर्तिर्भवति शाश्वती ।**
**अतो गच्छ कथं चापि प्रणान्सन्धारयम्यहम् ॥**

"இராமன் கடலை வற்றச் செய்து பாணங்களால் அணையைக் கட்டி வானரங்களோடு வந்து இராவணனைக் கொன்று என்னை அழைத்துச் சென்றால்தான் இராமனுக்கு நிலையான புகழ் ஏற்படும். நீ சென்றுவா. நான் எப்படியாவது என் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறுவதாக அத்யாத்ம இராமாயணம்கூறுகிறது. இந்தஇடம் ஒருவிதமாகப் பொருத்தமாக இருக்கிறது எனலாம்.

அநுமான் இலங்கை முழுமையாக எரித்தாலும், விபீஷணனின் வீட்டைமட்டும் விட்டு மற்ற எல்லாவற்றையும் சாம்பலாக்கி விட்டார்.

**वर्जयित्त्वा महातेजा बिभीषणगृहं प्रति ।**
**क्रममाणः क्रमेणैव ददाह हरिपुंगवः ॥**

என்று. மேலும் இலங்கையிலுள்ள மக்கள் இம்மாதிரி பேசிக்கொண்டார்கள்.

**वज्री महेन्द्रो त्रिदशेश्वरो वा ।**
**साक्षाद्यमो वा वरुणोऽनिलो वा ॥**
**रुद्रोऽग्निरर्को धनदश्चसोमः ।**
**न वानरोऽयं स्वयमेव कालः ॥**
**किं ब्रह्मणः सर्वपितामहस्य ॥**
**सर्वस्य धातुश्चतु राननस्य ॥**
**इहागतो वानररूपधारी ।**
**रक्षोपसंहाराकरः प्रकोपः ॥**
**किं वैष्णवं वा कपिरूपमेत्यः ॥**
**रक्षो विनाशाय परं सुतेजः ॥**
**अनन्त मव्यक्त मचिन्त्यमेकं ॥**
**स्वमायया साम्प्रत मागतं वा ॥**

"இந்திரனே! யமனே! வருணனே! வாயுபகவானே! ருத்ரனே! அக்னியோ! குபேரனே! சந்திரனே! அப் அப்பப்பா இது குரங்கல்ல! யமனே நேராக வந்திருக்கிறான். அரக்கர்களை பூண்டோடு அழிக்கபிரம்மா, விஷ்ணு, சிவன் எல்லோரும் சேர்ந்து, குரங்கு உருவமாக வந்துள்ளார்கள் போல் நினைக்கமுடியாததும், அனந்தமானதும், புலப்படாததுமான மாயையின் உருவமே!" என்று.

அநுமான் இலங்கையை எரித்து விட்டுக் கடலில் தன் வாலை நனைத்து விட்டார். அப்பொழுது திடீரென சந்தேகம் வந்தது. நாம் இலங்கையை எரிக்கும்போது சீதையும் எரிந்து விட்டிருப்பாளோ என்று யோசித்து விட்டு தான் இனி இருப்பது வீண், சந்யாசம் வாங்கிக் கொள்வதுதான் மேல் என்று தீர்மானிக்கும் பொழுது ஐயமொன்று திடீரென ஏற்பட்டது.

**न मे दहति लाङ्गूलं कथमार्या प्रधक्ष्यति ।**
**अपि सा निर्दहेदग्निं न तामग्निः प्रधक्ष्यति ।**

என்னுடையவாலில் இருந்த நெருப்பு என்னையே சுடவில்லையே! பின் எப்படி சீதையை மட்டும் எரித்து இருக்கக் கூடும்? அக்னியால் சீதை எரிக்க முடியாதவள். ஏனெனில் அக்னியை எரிக்கும் சக்தியான பதிவ்ரதா சக்தியல்லவா அன்னைஜானகியினிடம் இருக்கிறது! எப்படி அக்னியால் எரிக்கப்பட்டிருப்பாள். அது நடக்காத ஓர் செயல் என்று சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, ஒற்றர்கள் சிலர் அவ்வழியே கூறிக்கொண்டு சென்றார்கள் "என்னே ஆச்சர்யம், இலங்கையே எரிந்து சாம்பலாகி விட்டது. ஆனால் சீதை மட்டும் அவ்விதமே இருக்கிறாள்" என்ற வார்த்தைகள் அநுமனின் காதில் விழுந்தது.

**शुश्राव हनुमान् वाक्यं चारणानां महात्मनाम् ।**
**दग्धेयं नगरी सर्वा साट्टप्राकारतोरणा ॥**
**जानकी न च दग्धेति विस्मयोद्भुत एव नः ॥**

உடனே தாவிக் குதித்துச் சீதையைப் பார்க்க சிம்சுபா மரத்தடிக்குச் சென்றார். அங்கு ஜானகியைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார்.

கம்பர் அழகாகக் கூறுகிறார்: இலங்கைப் பற்றி எரிந்துகொண்டிருக்கிறது என்று அரக்கர் அலறி புடைத்துக் கொண்டு இராவணனிடம் சொல்லும்போது உடனே இராவணன் "அரக்கர்களே அக்னியைப் பிடித்து இழுத்து வாருங்கள்" என்று கட்டளை இடுகிறான்.

**"உண்ட நெருப்பைக் கண்டனர் பற்றிக்**
**கொண்டணை கென்றான் அண்டரை வென்றான்"**

என்று. வால்மீகியில் கூறியபடி அநுமான் சிந்தித்ததாகக் கம்பர் கூறவில்லை. ஆனால் கடலில் வாலை நனைக்கும் போது சாரணர்கள் "சீதை எரிக்கப்படவில்லை" என்று சொன்னதாகக் கூறுகிறார்.

**"விட்டுயர்விஞ்சையர்வெந்தீ**
**வட்ட முலைத்திருவைகும்**
**புட்டிரள் சோலைபுறத்தும்**
**சுட்டிலது என்பது சொன்னார்"**

பிறகு அநுமான் சீதையை வணங்கி விடைபெற்றுத் திரும்புகிறார். அதே மகேந்திர மலையை அடைந்த அநுமான் மற்ற வானர்களுடன் கிஷ்கிந்தையைக் குறித்துப் புறப்பட்டார்கள். நடுவில் மதுவனத்தை அழித்து விட்டு எல்லா வானரங்களும் மயக்க நிலையில்வந்துகொண்டிருக்கும்போது ததிமுகன் என்ற மதுவனத்தைக் காத்த வேலைக்காரன் கிஷ்கிந்தைக்கு வந்து சமாசாரத்தைச் சொல்ல, எல்லோரும் அநுமானின் வரவை எதிர்நோக்கியிருக்க அநுமான் சுக்ரீவனைச் சந்தித்துப் பிறகு இராமனிடம் கண்டேன் சீதையை என்று கூறி, நடந்தனவற்றை யெல்லாம் சொல்லி மௌனமாக இருந்தார். இத்துடன் வால்மீகி சுந்தரகாண்டத்தை முடிவுக்குக் கொண்டுவந்துள்ளார்.

கம்பர், அநுமான் இலங்கையில் நடந்த விருத்தாந்தங்களை இராமனிடம் கூறி, எல்லோரும் இலங்கையை நோக்கிப் புறப்படத் தயாரானார்கள். அப்பொழுது இராமன் அநுமானின் தோளிலும், லக்ஷ்மணன் அங்கதன் தோளிலும் ஏறிக்கொண்டு தென் கடலின் கரையை அடைந்ததாகக் கூறுகிறார். இத்துடன் சுந்தரகாண்டத்தை முடித்துள்ளார்.

துளசிதாஸர் சுந்தரகாண்டத்தை ஸேதுபந்தம் வரை கொண்டு சென்று முடித்துள்ளார்.

இந்த காண்டத்திற்கு சுந்தர காண்டம் என்று பெயர்வரக் காரணம் பல விதமாகக் கூறப்படுகிறது. விதவிதமான கதைகளும் சொல்லப்படுகின்றன. அவைகள் யாவும் சரியானதாகப் படவில்லை. வால்மீகி சுந்தர காண்டம் என்று பெயர் வைத்ததற்குக் காரணம் பின்வருமாறுகூறுகிறார்கள்.

அதாவது இராமன் ஜானகியை விட்டுப் பிரிந்து ஒன்றும் தெரியாமல் துக்கப்பட்டுக் கொண்டிருக்கும் போது, அநுமான் ஜானகியைப் பார்த்து விபரமறிந்து இராமனிடம் கூறஇராமன்ஒப்பற்றமகிழ்ச்சியடைந்தான். அந்த மகிழ்ச்சியை சுந்தரம் என்று கூறுகிறார். ஆகையால் இக்காண்டத்திற்கு சுந்தர காண்டம் என்று பெயர் வந்தது என்று கூறுகிறார்கள்.

सुन्दरे सुन्दरो रामः सुन्दरे सुन्दरी कथा ।
सुन्दरे सुन्दरी सीता सुन्दरे किन्न सुन्दरम् ॥

அழகில் அழகானவன் இராமன், அழகானவற்றில் அழகான கதை, அழகில் உயர்ந்தவள் சீதை இவைகளைவிட அழகானவைகள் எவை இருக்கமுடியும். ஆகையால் "पुरुषेषु रामः" என்று முதுமொழி ஒன்று கூறப்படுகின்றது.

இக்காண்டத்தில் இராமாயணத்தின் கதை மூன்று முறை சுருக்கமாகக் கூறப்படுகிறது. ஆகையால் இக்காண்டத்திற்கு சுந்தர காண்டம் என்று பெயர் வந்தது என சிலர் கூறுகின்றனர்.

இக்காண்டத்தைப் பாராயணம் செய்தால் கார்யசித்தி பெறலாம். சீதைஇராமனுக்குக் கிடைத்தமாதிரி, போனபொருள், கைகூடாதகார்யம் நினைத்த அபிலாஷைகள் எல்லாம் இக்காண்ட பாராயணத்தால் கிடைக்கும் ஸ்ரீராமனின் அருளால் என்று கூறிமுடிக்கப்படுகிறது.

**சுந்தரகாண்டம் முடிந்தது**

*முக்கவி கண்ட காப்பியம் எனும் இத்தொடர் கட்டுரையினை தி. தி. தே. விரைவில் தன்னுடைய வெளியீடாக வெளிக்கொணர இருப்பதால், இத்தெடர் கட்டுரை இவ்விதழுடன் நிறுத்தப்படுகிறது.*

---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

விருந்தினர் வருகை அல்லது நண்பர்கள், அவ்வப்போது பிரயாணம் அதனால் சிறிது இடையூறுகள். 21-ம் தேதிவரை குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள். பின்னர் மகிழ்ச்சி மற்றும் பணவரவு.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

இவ்ராசிக்காரர்கள் இம்மாதம் முழுவதும் மகிழ்ச்சியுடன் விளங்குவர். பணவரவு, வெற்றி, உடல்நல மேன்மை, தீயநடவடிக்கைகளில் ஈடுபடல், புதிய ஆடை ஆபரணங்கள். 21-ம் தேதிக்குப் பிறகு தீய நண்பர்களுடன் சேருவதால் தவறான நடவடிக்கைகளுக்குள்ளாதல், அதனால் அச்சத்திற்குள்ளாதல்; 15-ம் தேதிக்குப்பிறகு உடல் நலக் குறைவால் சிறிது அவதியுறல்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

அதிக செலவினங்கள் அல்லது பணநஷ்டம்; 13-ம் தேதிக்குப்பிறகு நிலைமை சிறிது நன்மைதரும். சிறிதளவு கருத்து வேறுபாடுகள் மற்றும் சிறிது மனக்கவலைக்குள்ளானாலும் குடும்பத்திலும் அலுவலகத்திலும் மதிப்புடன் விளங்குவர். தவறான வழியில் பணம் பெறுவதற்கு நண்பர்களுடன் சேர்ந்து தீய நடவடிக்கைகளை மேற்கொளல்.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

13-ம் தேதிவரை பிரயாணம் அதனால் இடையூறுகளுக்குள்ளாதல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் சிறிது அவதியுறல். எனினும் கேளிக்கைகளில் ஈடுபடல். மேலும் சிறிது கருத்து வேறுபாடுகள் அல்லது அலுவலகக் கவலைகள், வீட்டில் திருடுபோதல், 21-ம் தேதிக்குப் பிறகு தவறான ஆலோசனையைக் கேட்டதனால் பணநஷ்டம், தவறான நடவடிக்கைகளில் ஈடுபடல்.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

இவ்ராசிக்காரர்களுக்கு இம்மாதம் முழுவதும் மனயமைதி இருக்காது. 13-ம் தேதிக்குப்பிறகு பிரயாணம் மற்றும் துன்பத்திற்குள்ளாதல் அல்லது பணநஷ்டம். 21-ம் தேதி வரை தீய சேர்க்கையுடன் இருத்தல். பின்னர் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். 23ம் தேதிக்குப் பிறகு நிலைமை சற்று மாறும் எனினும் இறை வழிபாடு நல்லது.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

பிரயாணம் மற்றும் கேளிக்கைகளில் ஈடுபடல், எனினும் பணநஷ்டம் அல்லது மனைவிக்கு மனயமைதியின்மை, 13-ம் தேதி வரை முயற்சிகள் வெற்றியடையப் பெறல். 21ம் தேதிக்குப்பிறகு கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். பின்னர் மனமகிழ்ச்சியுடன் விளங்குவர். மொத்தத்தில் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏதும் இராது.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

திருப்பதி-திருமலை தேவஸ்தானத்தின் முதல் அருங்காட்சியகம்



தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும் பொருட் காட்சி நிலையத்தினை திறந்து வைத்த போது.



ஸ்ரீ அன்னமாச்சார்யா கவிதைகள் பொறிக்கப் பெற்ற செப்பேடுகளை ஜனாதிபதி அவர்கள் பார்வையிடுகின்றார்.

அன்னமாச்சார்யா திட்டத்தின் இசைக் கலைஞர்களால் நிகழ்த்தப் பெற்ற இசை நிகழ்ச்சிக்கு ஜனாதிபதி அவர்கள் வருகை புரிந்தபோது.



# தி. தி. தேவஸ்தானம் - ஒரு கண்ணோட்டம்

1) கோயில்கள் — 42

2) தங்கு வசதிகள் :

a) இலவச அறைகள் 1102

b) வாடகை அறைகள் மற்றும் காட்டேஜுகள் 812

c) விருந்தினர் விடுதிகள் சத்திரங்கள் 16

3) உணவு விடுதிகள் 5

4) மருந்தகங்கள், மருத்துவ மனைகள் 7

5) கல்வி நிறுவனங்கள் :

a) வடமொழி மற்றும் சமயக் கல்லூரிகள் 5

b) கலை மற்றும் விஞ்ஞானக் கல்லூரிகள் 5

c) நுண்கலை மற்றும் தொழிற்நுட்பக் கல்லூரிகள் 4

d) பள்ளிகள் 8

6) அறநிலைய நிறுவனங்கள் 2

7) பூந்தோட்டங்கள் (312 ஏக்கர்) 28

8) மாட்டுப்பண்ணை

a) தற்போது இருக்கும் கறவை மாடுகள் 439

b) வேளாண்மை :

உழுதப்பெற்றன ஏக்கர் 150

உழுதப்பெறுதன ஏக்கர் 110

9) காட்டு நிலப்பரப்பு :

(26.75 ச•மீ. பரப்பளவு) ஏக்கர் 6610

10) தீர்த்தங்கள் (புராணங்களின்படி 1191) 16

11) அணைகள் 2
(1 கட்டப்பட்டுள்ளது: 2வது கட்டப் பட்டு வருகின்றது)

12) அரும் பொருட்காட்சி நிலையங்கள் [illegible]

13) துறைகள் 58

14) அலுவலர்கள் 5392
(எல்லாப் பிரிவினரையும் சேர்த்து)

15) அச்சகம் 1

16) வெளியீடுகள் :

a) மாதவெளியீடு (5 மொழிகளில்) ஸப்தகிரி

b) வருடவெளியீடு பஞ்சாங்கம்

c) 1979–80ல் வெளியிடப்பட்ட சமய நூல்கள் மற்றும் இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் வெளியிடப்பட்ட நூல்கள் எண்ணிக்கை 65

17) இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா நிலையங்கள் 14

18) தகவல் தொடர்பு நிலையங்கள் 17

19) திருமண மண்டபங்கள் 9

20) வருகைபுரிந்த யாத்திரிகர்கள :

a) 1979–80 இல் 61,10,028

b) 1-4-80 முதல் 31-10-80 வரை 45,16,9[illegible]

c) நவம்பர் 30இல் 4,56,338

21) மொத்த வருவாய் பல்வேறு வகைகளில் :

ரூ. பை

a) 1979–80 இல் 15,78,31,137–00

b) 1-4-80 முதல் 31-10-'80 வரை 12,06,30,360–00

c) நவம்பர் '80ல் ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில் வருமானம் 97,93,153–00